# நீங்கள் நிம்மதியாக உறங்க வேண்டுமென்பதற்காக நாங்கள் உறங்காத இரவுகள் பல.

ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களின் முன்னோடிகளான சுந்தரம்-கிளேட்டனுக்கு பாதுகர்ப்பு என்பது ஒரு அர்த்த மற்ற உறுதிமொழி அல்ல. எங்கள் சாதனங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிப்பதற்கேற்ப உருவாக்கப்பட்டவை.





ஆம், இன்று இந்நாடு முழுவதிலும் இலட்சக்கணக்கானவர்கள் தங்கள் அன்புக்குரியவர்களான ஆயிரக்கணக்கான பஸ்/லாரி ஓட்டுபவர்கள், பயணிகள் தங்களிடம் பத்திரமாகத் திரும்பி வந்து விடுவர் என அமைதியுடன் நம்பிக்கையோடு உறங்குகின்றனர். சுந்தரம்-கிளேட்டனில், மிகவும் தனித்தன்மை வாய்ந்த இத் துறையில் முன்னோடிகளான நாங்கள், இந்த நம்பிக்கையை அளிக்கின்றோம் (அதிலிருந்து சாலைப் பாதுகாப்பின் புதியதோர் முறை உருவாகிவிட்டது.)

இன்று, இந்தியாவிலுள்ள ஒவ்வொரு ஹெவி-ட்யூடி வண்டியிலும் எங்களுடைய காற்றுத் தடை உபகரணங்கள் அசல் உறுப்புகளாகப் பொருத்தப்பட்டுள்ளன. இத்துடன் நாங்கள் இருந்துவிடமாட்டோம். உங்களது பாதுகாப்பு எங்களுக்கு மிகப் பெரியதொரு பொறுப்பு. (அதற்காக நாங்கள் பல இரவுகள் உறக்கமின்றி உழைக்கத் தயாராக உள்ளோம்).

## உங்கள் பாதுகாப்பிற்கு எங்கள் உத்திரவாதம்

இன்றைய தொழில் நுணுக்க முன்னேற்றம், ஆராய்ச்சி, தரக்கட்டுப்பாடு, தரச்சிறப்புச் சோதனைகள் (உதாரணமாக ஒரு பிரேக்சேம்பர் டயாஃபரம் பல லட்சக்கணக்கான தடவைகளுக்குமேல் சோதிக்கப்படுகின்றது) இது போன்ற தொடர்ச்சியான சில வழி முறைகள் மூலம் நாங்கள் பிரேக் சாதனத்தை மட்டும் அளிக்க வில்லை. உங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிக்கும் ஒரு சிறந்த சாதனத்தையே அளிக்கின்றோம்.

## நாங்கள் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றோம்— அதனைப் பாதுகாக்கவும்

CD TVS அளிக்கும் முழுமையான காற்று மற்றும் காற்று-உதவி கொண்ட பிரேக் சாதனங்களின் உறுதியான பாதுகாப்பு எப்பொழுதும் உங்களுக்குக் கிடைப்பதற்கு உங்கள் சாதனத்தை முறையாகப் பராமரியுங்கள். மற்றும் எப்பொழுதும் அசல் CD-TVS உறுப்புகளையே வாங்கி உபயோகியுங்கள். இதனை அலட்சியம் செய்யவேண்டாம். உங்கள் நன்மைக்காகத்தான் சொல்கின்றோம்.

**சுந்தரம்-கிளேட்டன் லிமிடெட்**
பாடி, சென்னை 600 050

**உங்கள் பாதுகாப்பு எங்கள் தொழில்**




SAA SCL 2587

# Kalki Shopping Page





# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1979





ஏராளமான எழுத்தாளர்களின் வேண்டுகோளுக்கு இணங்கி முடிவு தேதியை ஒரு மாதத்துக்கு ஒத்திப் போட்டிருக்கிறோம்.

**முடிவு தேதி: மே 31**

எழுத்தாளர்கள் இந்த வாய்ப்பைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

| | |
|---|---|
| **முதல் பரிசு** | **ரூ. 1000** |
| **இரண்டாம் பரிசு** | **ரூ. 500** |
| **மூன்றாம் பரிசு (இரு கதைகளுக்கு தலா ரூ. 250 வீதம்)** | **ரூ. 500** |

ஆகமொத்தம் ரூ 2000 - பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ 100 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளருக்கு போனஸ் உண்டு.

- கதைகள் சொந்தக் கற்பனை என்ற உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்குமுன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் எனவும் உறுதிமொழி தரவேண்டும்.
- நடுவர்கள் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.
- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப்பெற போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுய விலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப்போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது —

**ஆசிரியர் கல்கி, சென்னை-600 032.**





நிருபர்: தங்கள் மாளிகையில் அன்னை ஆனந்தமயி வந்து தங்க போவதாகக் கேள்விப் படுகிறேனே வாஸ்தவமா?

ஆளுனர்: அன்னை ஆனந்தமயி சென்னைக்கு வருகிறார் என்பதும் பொது மக்களுக்குத் தரிசனம் அளிப்பார் என்பதும் வாஸ்தவம். ஆனால் ராஜ்பவன் **மாளிகையில்** தங்கப் போகிறார் என்பது வாஸ்தவமில்லை. ஏனெனில் அன்னை மாளிகை, கட்டிடங்களில் தங்குவதில்லை. பர்ணசாலை போன்ற எளிய குடிசையில்தான் தங்குகிறார். ஆகவே, ராஜ்பவனத் தோட்டத்தில் அவருக்காகத் தனியே ஒரு பர்ணசாலை வேயப்படுகிறது.

நிருபர்: அவர் என்றைக்கு வருகிறார்? எத்தனை நாட்கள் தங்கப் போகிறார் என்ற விவரங்கள் கொடுப்பீர்களா?

ஆளுனர்: பதினெட்டாம் தேதி காலை ஐந்தரை மணிக்கு வருகிறார். அன்றிரவே கல்கத்தாவுக்குப் பிரயாணப் பட்டு விடுகிறார்.

நிருபர்: நீங்கள் இதற்கு முன் தரிசித்திருக்கிறீர்களா?

ஆளுனர்: ஓ. சென்ற பத்து ஆண்டுகளாக அன்னையை அறிவேன். அகமதாபாத்துக்கு அவர்கள் வரும்போதெல்லாம் தரிசனம் செய்துள்ளேன்.

நிருபர்: அன்னையின் பால் தங்களை ஈர்த்தது எது?

ஆளுனர்: பொதுவாக நான் நல்லோர் இணக்கத்தை — சத்சங்கத்தை — விரும்புபவன். அதுதான் என்னை

# கபடம் அறியாதவர்!



## ஆளுநருடன் பேட்டி

அவர் சந்நிதானத்தில் கொண்டு நிறுத்தியது.

நிருபர்: அன்னையைப் பற்றித் தங்கள் உள்ளத்தில் மேலோங்கி நிற்கும் எண்ணங்களைக் கூறுவீர்களா?

ஆளுனர்: அவருடைய எளிமையும், அந்தத் தெய்வீகப் புன்னகையும் எவரையுமே ஆட்கொள்ளக் கூடியன. அவர் சந்நிதானத்திலிருந்தாலே போதும், அந்தச் சூழலைச் சுற்றித் தெய்வீகம் கமழ்வதை, பரிமளிப்பதை நுகர்வோம். அவரது அபரிமிதமான தெய்வ பக்தி, நம்மையும் பக்தர்களாக்கி விடுகிறது.

நிருபர்: நீங்கள் இப்பொழுது அளித்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு, வேறு இரண்டொரு விஷயங்கள் பற்றி மக்களிடை ஏற்பட்டுள்ள சந்தேகங்களைக் கேட்டுத் தெளிவு பெறலாமா?

ஆளுனர்: கேளுங்கள்.

நிருபர்: ராஜ்பவனில் விசேஷ விருந்தினர்களுக்குக்கூட மது வழங்கப் படுவதில்லையாமே...

ஆளுனர்: நான் செல்கிற இடமெல்லாம் மதுவிலக்குப் பிரசாரம் செய்கிறேன். மக்களைக் குடிக்காதீர்கள் என்று உபதேசம் செய்கிறேன். இப்படி ஊருக்கு உபதேசம் செய்துவிட்டு, நான் ராஜ்பவனில் மதுவை வழங்கிக் கொண்டிருந்தால், அது முறையாகுமா? ஊருக்கு ஒன்றும் எனக்கு ஒன்றுமாக வாழ்க்கையை நடத்தும் கபடமுறையைக் கடைப்பிடிக்க நான் தயாராயில்லை.

இன்னொரு விஷயமும் இதிலிருக்கிறது. ராஜாஜியின் பெயரை வேறு இழுக்கிறார்கள். ராஜாஜி கவர்னராக இருந்த போதும், கவர்னர் ஜெனரலாக இருந்தபோதும், அவர் தீவிர மதுவிலக்குக் கொள்கையில் நம்பிக்கை கொண்டவராயிருந்தும் கவர்னர் மாளிகையிலும் ராஷ்டிரபதி பவனிலும் தமது கொள்கையை வற்புறுத்தவில்லை என்கிறார்கள். அவர் கவர்னராக இருந்த மேற்கு வங்கத்திலும் கவர்னர் ஜெனரலாக இருந்த டில்லியிலும் மதுவிலக்கு சட்ட பூர்வமாகக் கொண்டு வரப்படவில்லை. தமிழகம் முழுவதும் மதுவிலக்கு சட்ட பூர்வமாக அமுலாகியுள்ளது. தமிழகத்தின் கவர்னரும் முதல் பிரஜையுமான நானே சட்டத்தை மீறலாமா?

நிருபர்: ராஜ்பவனில் தங்க வரும் மேல்நாட்டு விருந்தினர்களுக்குத் தாங்கள் அசைவ உணவு அளிக்க மறுப்பதால் அவர்கள் ஹோட்டல்களில் தங்க நேர்கிறது என்று புகார் கூறப்படுகிறதே!

## எதிர்காலச் செல்வங்கள்



என் மகன் கணேஷ் (வயது இப்போது ஐந்து) நான்கு வயதில் பள்ளிக்குச் செல்லும்போது ஒருநாள் காலையில் என்னிடம் வந்து "அம்மா, இந்த ஷூஸ் சின்னதாகி விட்டது. கால் வலிக்கிறது. நடக்க முடியவில்லை" என்று கூறினான். நான் உடனே அவனிடம் "நானே உனக்கு வேறு ஷூஸ் வாங்கித் தருகிறேன். இதை யாருக்காவது கொடுத்து விடலாம்" என்று கூறினேன். அதற்கு அவன் "அம்மா, இதை சுந்தாவிற்கு (அவன் மாமாவின் பெண்) கொடுத்து விடலாம்" என்று கூறினான். நான் "அவள், பெண் குழந்தை. இதை ஆண் பிள்ளைதான் போட்டுக் கொள்ள வேண்டும்" என்று பதில் சொன்னேன். அவன் சிறிது நேரம் யோசித்து விட்டு "அம்மா, எனக்கு எப்போது கல்யாணம் செய்யப் போகிறாய்?" என்று கேட்டான். "நீ பெரியவனாகிப் படித்து, முடித்தவுடன்" என்று சொன்னேன். உடனே அவன், "கல்யாணம் ஆனவுடன் எனக்குக் குழந்தை பிறக்குமல்லவா? அப்போது அந்தப் பையனே இதைப் போட்டுக் கொள்ளலாம். பத்திரமாகப் பெட்டியில் எடுத்து வை", என்று கூறிச் சென்றான். அவனுடைய கற்பனையை எண்ணி, நானும் என் கணவரும் வியந்தோம்.

லலிதா கந்தசாமி.

ஆளுனர்: நான் சென்னைக்கு கவர்னராக வந்த பிறகு சுமார் நானூறு வெளி நாட்டுக் குழுவினர் ராஜ்பவனில் வந்து தங்கி யிருக்கின்றனர். ஒரே ஒரு குழுவினர் மட்டும் தான் ஹோட்டலில் தங்கினர். அவர்கள், அயர்லாந்து நாட்டு ஜனாதிபதியும் அவருடன் வந்தவர்களுமாவர். அவர்கள் சென்னையிலிருந்து பெங்களூர் சென்றனர். அங்கும் ஹோட்டலில் தான் தங்கினர். அதை விட்டு பம்பாய் சென்றனர். பம்பாய் கவர்னர் அசைவ உணவுப் பழக்கமுள்ளவர்தான். இருப்பினும் அங்கும் ஹோட்டலில் தங்கினர். ஏன்?

ஐரிஷ் ஜனாதிபதியுடன் தொண்ணூறு பேர்கள்வந்தனர். அவர்கள் அத்தனை பேரும் தனித்தனி அறைகள் விரும்பினர். அத்தனை அறைகள் சென்னையிலுள்ள ராஜ் பவனத்தில் இல்லை. அதனால்தான் ஹோட்டலில் தங்க நேர்ந்தது.

அது மட்டுமல்ல. அவர்கள் ஒருநாள் பிற்பகல் மாலை வந்து மறுநாள் காலை புறப்பட்டுச் சென்றனர். அவர்கள் சென்னையில் தங்கியிருந்த நேரத்தில் ஒரு வேளைதான் சாப்பிட முடியும். அந்த ஒரு வேளைச் சாப்பாடும் நான் அளித்ததுதான். சைவ உணவுச் சாப்பாட்டைத்தான் அந்தத் தொண்ணூறு பேரும் ரசித்துச் சாப்பிட்டார்கள். அவர்கள் தங்கியிருந்த ஹோட்டல் சாப்பாட்டை ஏற்கவில்லை.

பொதுவாக வெளிநாட்டு விருந்தினர் வந்தால் ஒருநாள் அல்லது இரண்டு நாள் தங்குவார்கள். அதிக பட்சம் போனால் மூன்று நாள் தங்குவார்கள். அவர்களுக்கு அசைவச் சாப்பாடு வேண்டுமானால் சென்னை நகரிலுள்ள பெரிய ஹோட்டல்களுக்குச் சென்றோ அல்லது வரவழைத்தோ சாப்பிட்டு, பில்லை என்னிடம் தந்து விடுமாறு சொல்வேன். ஏனெனில் அவர்கள் என் விருந்தினரல்லவா? இது வரை ஒருவர்கூட அசைவ சாப்பாடுதான் வேண்டுமென்று சொன்னதில்லை. 'நீங்கள் சாப்பிடும் சைவச் சாப்பாடே ஏற்கிறோம்' என்று கூறுகின்றனர்.

முதல்நாள் குஜராத்தி சைவ உணவு வகைகளைப் பரிமாற ஏற்பாடு செய்கிறேன். இரண்டாவது நாள் தமிழக உணவு வகைகள் தரப் படுகின்றன. மூன்றாவது நாளும் தங்கினால் அகில இந்தியாவில் மற்ற மாநிலங்களில் பழக்கத்தில் இருக்கும் உணவு வகைகளைப் பரிமாறுகிறேன். 'சைவ உணவில் இத்தனை வகை உணவுகள் தயாரிக்க முடியுமா? அதுவும் நல்ல புரதச் சத்துள்ள உணவு வகைகள் இத்தனை தயாரிக்க முடியுமா? எவ்வளவு ருசியாக இருக்கின்றன!' — என்று வாயார மனமாரப் பாராட்டி விட்டுச் செல்கின்றனர். பலர் தங்கள் நாட்டுக்குச் சென்ற பின்பும் இந்தச் சைவ உணவு வகைகளை நினைத்துக் கொண்டு பாராட்டி எழுதுகின்றனர். 'சிலர் உங்கள் சமையல் காரர்களை எங்கள் நாட்டுக்கு எங்களுடன் அனுப்பி வையுங்களேன்' என்று கோரியுமிருக்கின்றனர்!

---

ராமநத்துக்காரர் நகரில் முடி வெட்டிக் கொள்ள வந்தார்.

சலூன் கடைக்காரர் : (சுவரில் மாட்டியிருக்கும் போட்டோக்களைக் காட்டி)

அமிதாப்பச்சன் கட்டிங்கா?
ராஜேஷ்கன்னா கட்டிங்கா?
கமலஹாஸன் கட்டிங்கா?

ராமநத்துக்காரர்: ஐயா நான் முடியை வெட்டிக்கத்தான் வந்தேனுங்க, முடியை மாட்டிக்க வரல! ஆளை விடுங்க!

நெய்னு முகமது.



# வியாசர்பாடியில் ஒரு விபரீதம்



தலைமை சமையல்காரர் செபாஸ்டியன்

சர்வதேசக் குழந்தைகள் ஆண்டினையொட்டி சென்னை வியாஸர்பாடி டான் பாஸ்கோ, பிட்டிமூட்ஸ் சமூகநல கேந்திரம் ஆகியவற்றின் சார்பில் விழா கொண்டாடப் பட்டது. குழந்தைகளுக்கு மதிய உணவும், நீர் மோரும் இலவசமாக அளிக்கப்பட்டன. இதைச் சாப்பிட்டதில் பல குழந்தைகளுக்கு வாந்தி ஏற்பட்டு மருத்துவ மனையில் அனுமதிக்கப் பட்டனர். ஒரு சிறுவன் மரணமடைந்தான். வியாசர்பாடி சென்று விசாரித்த போது:

தலைமைச் சமையல்காரர் செபாஸ்டியன் கூறுகிறார்:

இங்கு வந்து சேரும்பொழுது நான் வாட்ச்மேனாகத்தான் நுழைந்தேன். ஒருநாள் இரவு என்னைச் சமையலறையில் ஆள் இல்லாததால் கவனித்துக் கொள்ளச் சொன்னார்கள். அன்று ஆரம்பித்த சமையலறை வேலை இன்னும் தொடர்கிறது. கொஞ்சம் கொஞ்சமாகக் கற்றுக் கொள்ள ஆரம்பித்த நான் இன்று முழுநேர சமையல்காரனாக இருக்கிறேன். எங்களது மோரிலோ, தயிர் சாதத்திலோ எந்தவிதத் தவறும் நேர்ந்திருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நாங்கள் உபயோகப்படுத்தும் பாத்திரங்கள் அலுமினியம் இந்தாலியம் ஆகியவைதாம்.

இறந்த சிறுவன் சேகரின் தாயார் முனியம்மா:

என் பையனுக்கு எந்த வியாதியும் கிடையாதுங்க. அவன் எப்பவும் துள்ளி விளையாடிண்டிருப்பான். என்ன நடந்தது என்று எங்களுக்குத் தெரியாதுங்க. என்று நானும் என் கணவரும் வேலைக்குப் போயிட்டோம். வீட்டுக்குத் திரும்பி வந்தா அதிர்ச்சி. ஆண்டவன் எங்களைச் சோதிக்கிறார் அவ்வளவுதான். இவங்க நடத்தின பந்தயத்திலே இரண்டாவது பரிசு வாங்கினான். ஆனா பரிசைக் கண்ணால் பார்க்காமல் போய்விட்டான்.

டான்பாஸ்கோ பள்ளியின் தலைமை அதிகாரி (டைரக்டர்) Rev Father Chlooz கூறுகிறார்:

சென்னை மாநகராட்சியிலிருந்து அவ்வப்பொழுது இங்கு வந்து கிருமிநாசினி மருந்து தெளிப்பார்கள். சமையலறையில் தெளிக்கப்படும் மருந்தைச் சுத்தமாகக் கழுவி விட்டுத்தான் நாங்கள் சமைப்போம். ஆனாலும் நம் இந்தியர்களிடம் எப்பொழுதுமே ஒரு நல்ல பழக்கம் இருக்கிறதல்லவா? மேஜை மீது உட்கார்ந்து கொண்டு வேலை செய்யுங்கள் என்றாலும் தரையில் உட்கார்ந்து வேலை செய்வதுதான் வசதி என்பார்கள். காய்கறி நறுக்குவது முதலிய பல வேலைகளைத் தரையில் வைத்துச் செய்திருக்க வேண்டும். இதுதான் காரணமோ என்று நான் நினைக்கிறேன். ஆனால் எங்களுக்கு ஒரு வகையில் ஆறுதலாக இருந்தது மக்கள்தான். யாருமே எங்களைக் குற்றம் சொல்லவில்லை. கோபப்பட்டுக் கத்தவுமில்லை. பிரச்னையை நன்கு புரிந்து கொண்டிருக்கிறார்கள். நாங்கள் செய்ய நினைத்தது, செய்தது ஆகியஎல்லாமே நல்லதுக்குத்தான். சேகரின் தந்தை பெருமாளுக்குக் கூட இங்கு வேலை போட்டுத்தர இருக்கிறோம். ஆனால் நாம் ஒன்று நினைக்க ஆண்டவன் ஒன்று நினைக்கிறானே!

பாதர் ஸ்லூஸ்



ஆஸ்பத்திரியின் தலைமை டாக்டர் கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார்:

காரணத்தை நிர்ணயிப்பது சிரமம். பாத்திரங்களில் ஈயம் பூசாமலிருக்கலாம். சமையல் செய்பவர்களுக்குத் தொற்றுநோய் இருக்கலாம். அல்லது வழங்கப்பட்ட அரிசி, பால், தயிர் இவைகளில் கிருமிநாசினி மருந்து கலந்துவிட்டிருக்கலாம். எப்படி இருந்தாலும் டான்பாஸ்கோ சங்கத்தைச் சேர்ந்தவர்கள் முதல் உதவி செய்து சீக்கிரம் குழந்தைகளை எங்களிடம் அழைத்து வந்ததால்தான் இதற்கு மேல் விபரீதம் ஏற்படாமல் எங்களால் தடுக்க முடிந்தது. கொஞ்சம் தாமதித்திருந்தாலும் விபரீத விளைவுகள் ஏற்பட்டிருக்கும். கொண்டு வந்த 2 மணி நேரத்தில் கிட்டத்தட்ட 300 பாட்டில் ஸலைன் ரத்த நாளம் மூலம் ஏற்றியிருக்கிறோம். ஒரு குழந்தைக்கு 2 பாட்டில் கொடுத்திருக்கிறோம்.

எப்படியோ 2260 குழந்தைகள் கலந்து கொண்ட விழாவில் 700 குழந்தைகள் அவதிப்பட்டு அவர்களில்பாதிக்கு மேல் மருத்துவ மனையிலிருந்து இரு நாட்களுக்குள் சரியாகித் திரும்பி விட்டனர், சேகர் என்ற ஒரு சிறுவனைத் தவிர.

புகைப்படம், கட்டுரை:
**அசோக் குமார்.**



சிறுவன் சேகரின் பெற்றோர்கள் முனியம்மா, பெருமாள்

டாக்டர் கிருஷ்ணமூர்த்தி

# இந்திரா பற்றி இப்படி எழுதலாமா?

வட்டமேஜை



வயிறு வலிக்கச் சிரிக்க வைத்ததோடு சிந்தனையைத் தூண்டியது. இது போன்ற கட்டுரைகள் தொடரட்டும்.
நங்கவள்ளி பி. செல்வராஜி.

● இந்துக்கள் வணங்கும் தெய்வத்துக்குச் சமமான பசுக்களை, கொல்வதைத் தடுக்க உண்ணாவிரதம் இருந்த ஆச்சார்ய வினோபாவைக் கேலிக்குள்ளாக்குவது போல் இருந்த செம்பியனின் கட்டுரை எங்களை வேதனைப்படுத்துகிறது.
செங்கோட்டை ஏ.எம். ராஜ்

● ஹாக்கியில் நாம் தாழ்ந்து போவதற்கான காரணங்களை அருமையாக வெட்ட வெளிச்சமாக்கி விட்டார் திரு பி. கிருஷ்ணமூர்த்தி.
திருப்பூர்–2 • அ. லோகநாதன்

● ''அதிர்ச்சி வைத்தியம்'' தலையங்கத்தின் மூலம், பிற நாட்டு விவகாரங்களில் அமெரிக்க அரசு தலையிடுவதைக் கண்டித்துள்ளீர்கள். இதே சமயம் கார்ட்டரின் நிர்வாகம் அமெரிக்க உளவுப்படையினர் மீது புதிய கட்டுப்பாடுகள் கொண்டு வரப்போவதாகச்செய்தி வந்துள்ளது. உங்கள் தலையங்கத்துக்குப் பாராட்டுக்கள்.
கோபிசெட்டிப் பாளையம் கே. பி. ஆண்டவன்

● குழப்பங்களைத் தோற்றுவித்து *Fishing in the troubled waters* என்ற கொள்கையைத்தான் அமெரிக்கா இந்நாள் வரை கடைப் பிடித்து வருகிறது. அதை நீங்கள் கட்டிக் காட்டியிருக்கிறீர்கள். அதற்கு நன்றி. ஆனால் சம்பந்தா சம்பந்தமில்லாமல் 'இந்திரா காந்தி ஜனநாயகத்தைக் குழி தோண்டிப் புதைத்து விட்டதாக'வும் ஒரு வரி எழுதி உங்கள் கல்யாண குணத்தைத் தெளிவுபடக் கூறி விட்டீர்கள்.
ஆண்டாங்கோயில் எஸ். வடிவேலன்

● அட்டைப்படம் முகத்தைச் சுளிக்க வைத்தது. நான் மட்டுமல்ல, நான் தருகின்ற 'கல்கி'யைப் படிக்கின்ற பெரியவர்கள் கூட 'கல்கியிலுமா நடிக, நடிகையரின் படங்கள்' என்று கூறி வருத்தப் படுகிறார்கள்.
இராஜபாளையம் எஸ். விஜயன்

● ரதியைப் பற்றிய அட்டைப்பட விளக்கத்தில், ''ஆனாலும் என்ன? கண்கள் பேசுகின்றனவே! அதற்கு மொழி எதற்கு?'' என்று கூறியிருக்கிறீர்கள். ''ரதியின் கண்கள் தான் பேசுகின்றனவே! அதற்கு அட்டைப் பட விளக்கம் எதற்கு? தேவையா?''
திருப்பாப்புலியூர் கு. குருமுருகு

● புது முகங்களை அறிமுகம் செய்கிறோம் என்ற பேரில் தமிழ் கொஞ்சம் கூடத் தெரியாதவர்களைத் தமிழ்ப் படங்களில் நடிக்க வைப்பானேன்? தமிழகத்தில் தமிழ் பேசும் நடிக, நடிகைகளுக்குப் பஞ்சமா?
சென்னை–34 ஜ. இராமச்சந்திரன்

● செம்பியனின் 'பசுக்களின் உண்ணாவிரதம்' சூப்பர்ப். அருமையான சடையர்.

● அது கோர்ட்டு தீர்ப்பு! இது? என்ற சிறுகதையில் குற்றவாளிகள் இறைவனிடமிருந்து என்றும் தப்ப முடியாது, என்று இயக்குனர் ப. நீலகண்டன் நயம்படப் புலப்படுத்துகின்றார்.
பரமசிவபுரம் இரா. அறிவழகன்

● மூன்றாண்டு சந்தா அனுப்பி *Joy Toy Light and Hoot Torch* பரிசாகக் கிடைக்கப் பெற்றேன். புதிய செல்களைப் போட்ட டார்ச் வெளிச்சம் கண்ணைப் பறிப்பதைப் போல, அப்போதைக்கப்போது புதிய திட்டங்களைப் புகுத்தி 'கல்கி' வாசகர்களின் மனத்தைப் பறித்து விடுகிறீர்கள். *Three Cheers to Kalki!*
தஞ்சாவூர் வி. எஸ். சுதர்சனம்

● ''அகாடமி தீர்ப்பு: பாலசந்தருக்கு வெற்றி'' என்று தலைப்பிட்ட செய்தியைப் படித்தேன். தாங்கள் பெருந்தன்மையோடு கூடிய நல்ல எண்ணத்தில் இப்படித் தலைப்புத் தந்திருந்தாலும், இதை ''ராக தேவதைகளின் வெற்றி'' என்றே நான் சத்தியமாகக் கருதுகிறேன்.
சென்னை–4 வீணை வித்வான் பாலசந்தர்.

● நமது முதல்வர் கிராமப் பகுதிகளில் தொழிற்பேட்டைகளை அமைப்பவர்களுக்குப் பல சலுகைகளை அறிவித்திருக்கிறார். எந்த ஒரு தொழிலுக்கும் மின்சாரம் தான் முதல் மூலப் பொருள். ஆனால் நம் நாட்டில் மின்வாரியம் கிராம மக்களை மதிப்பதில்லை. நகர்ப் பகுதிகளில் இருபத்திநாலு மணி நேரமும் மின் சப்ளை இருக்கும் பொழுது கிராமத்திற்கு முன் அறிவிப்பின்றி நினைத்த நேரம் மின் இணைப்பு கொடுப்பதும், நிறுத்துவதுமாக இருக்கிறார்கள். இந்த நிலையில் எந்த முதலாளியும் துணிந்து கிராமப்புறங்களில் தொழில் ஆரம்பிக்க முன்வரமாட்டார்.
வாளாடி என். கூத்தபிரான்.

ஐம்பத்து மூன்று வயதான ஸ்ரீமதி மார்க்கரெட் தாட்ச்சர், ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் ரஸாயன விஞ்ஞானப் பட்டப் படிப்பு முடித்துக் கொண்டு, பின் சட்டம் பயின்று வழக்கறிஞராகத் தொழில் செய்தவர். அவர் கணவர் டெனிஸ் தாட்சர் ஓர் எண்ணெய் கம்பெனியில் நிர்வாக அதிகாரியாக இருந்து ஓய்வு பெற்றவர். தாட்சர் தம்பதிகளுக்கு வயது வந்த மகனும் மகளும் இருக்கிறார்கள். இவ்விருவரும் இரட்டைக் குழந்தைகளாகப் பிறந்தவர்கள்.

1970ல் ஸ்ரீமதி மார்க்கரெட் தாட்சர், கல்வித்துறை செயலாளராக பிரிட்டிஷ் அரசில் சேர்ந்தார். அப்போது அவரை நிருபர்கள் நீங்கள் ''பிரதமராக வருவீர்களா?'' என்று கேட்டார்கள்.

''பிரிட்டனில் ஒரு பெண் பிள்ளை பிரதமராக வருவதாவது? நடக்கிற காரியமா? நடந்தாலும் அது என் வாழ்நாளில் நடைபெறாது'' என்றுதான் கூறினார். இப்படிக் கூறிய பத்தாண்டுகளுக்குள் அவரே இன்று பிரிட்டிஷ் பிரதமராகியிருக்கிறார்.



# பாலைப் பறித்தும் பதவிக்கு வந்தவர்!

1975–ம் ஆண்டு உலக மாதர் ஆண்டாகக் கொண்டாடப் பட்டதல்லவா? அந்த ஆண்டில், பிரிட்டிஷ் கன்ஸர்வேடிவ் கட்சி ஸ்ரீமதி மார்க்கரெட்டைக் கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுத்தது. அப்போது அவரைப் பற்றி ஒருவர் கூறிய வாசகம், அவரை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது: ''அரசியல் வானில் ஒரு புது நட்சத்திரம் தோன்றியுள்ளது. அவர் பார்க்க அழகாக இருக்கிறார். சாமர்த்தியசாலி. அவரிடம் நகைச்சுவையுடன் கூடிய அறிவும் இருக்கிறது. நல்ல நெஞ்சுரம் கொண்டவராகவு மிருக்கிறார்.''

பிரிட்டிஷ் அரசில் கல்வித்துறை செயலாளராகப் பணியாற்றிய காலத்தில் பள்ளிக்கூடக் குழந்தைகளுக்கு இலவசமாகப் பால் வழங்கப்பட்டு வந்த திட்டத்தை அடியோடு நிறுத்தி விட்டார். ''பிரிட்டிஷ் மக்கள் பால் வாங்க முடியாத அளவுக்கு வறுமையில் வாடுபவர்கள் அல்ல'' என வாதாடினார். ''குழந்தைகளின் பாலைப்பறித்த பாவி'' என்ற அவப் பெயரும் கண்டனமும் அந்தக் காலத்தில் ஏற்பட்டது. இப்படியொரு காரியம் செய்து விட்டு எந்த அரசியல் வாதியாலும் வாக்காளர் முன்போய் நிற்க முடியாது. ஸ்ரீமதி மார்க்கரெட், வாக்காளர் முன்போய் நின்றதோடல்லாமல் தமது கட்சியைப் பிற கட்சிகளின் கூட்டோ தயவோ இல்லாமல் பெருவாரியான மெஜாரிட்டி பலத்துடன் ஆட்சிப் பீடத்தில் அமர்த்தியிருக்கிறார்.

''ஐயோ பாவம், பெண்'' என்று நினைக்கிற காலம் மலை ஏறி விட்டது. தொழிற்சங்கவாதிகளும், எதிர்த் தரப்பிலுள்ள தொழிற் கட்சித் தலைவர்களும் வேண்டிய தொல்லைகள் தருவதென்று இப்பொழுதே தீர்மானித்து விட்டார்கள்!

— சீதா

---

எனது நண்பர் என். பி. வேலு தமது கடையிலும், வீட்டிலும் இவ்வாறு எழுதிக் கண்ணாடிச் சட்டமிட்டு வைத்திருக்கிறார்:

'முதலில் கீழ்ப்படிவதற்குக் கற்றுக்கொள், கட்டளையிடும் தகுதி தன்னால்வரும்; முதலில் வேலைக்காரனுவதற்குக் கற்றுக்கொள், எஜமானனாகும் தகுதி பின்னால் வரும்.'

ஒரு பலசரக்குக் கடைச் சிப்பந்தியாகத் தமது வாழ்க்கையைத் தொடங்கின அவர், இன்று ஒரு பிரபல வர்த்தகப் பிரமுகராக வளர்ந்து வந்திருப்பதற்குக் காரணம், சுவாமி விவேகானந்தரின் இந்தப் பொன்மொழிதான்.

— என். எஸ். நாதன்.


இந்தக் கை சின்னங்களைப் பார்த்தால் அவ்வளவு நம்பிக்கையா இல்லையே!
தமிழ்நாடு இ. காங்கிரஸ்
தஞ்சை பிரகதீ ஆலய


உன்னாலே என்னை என்ன பண்ணிட முடியும்?
குரோவர் கமிஷன் தீர்ப்பு
மத்திய அரசு
Uma.


என்.ஜி.ஓ. வேலைநிறுத்தப் பிரச்னை



கல்கி

1979 மே 20

சித்தார்த்தி வைகாசி 6

மலர்: 37 இதழ்: 42



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்மியடி பாப்பா - பாரதியார்.

# வேண்டாம், அணுகுண்டு!

புட்டோவைத் தூக்கிலிட்டு உலக நாடுகளின் கண்டனத்தையும் வருத்தத்தையும் சம்பாதித்துக் கொண்ட பாக் அதிபர் ஜியா, மீண்டும் சர்வ தேசங்களின் வெறுப்பைச் சம்பாதிக்கும் காரியத்தில் இறங்கியுள்ளார்.

பாகிஸ்தான் அணுகுண்டு தயாரிக்கும் என்று நம்பகமாகத் தெரிய வருகின்றது. இச்செய்தி ஆதாரமற்றது என்று பாக் அதிபர் மறுத்துக் கூறிய போதிலும் ஐயப்பாடுகள் நீடிக்கின்றன.

இந்தச் சூழ்நிலையில், 'இந்தியா அணுகுண்டு தயாரிக்காது' என்ற கொள்கையில் மாற்றம் வேண்டும் என்று சில தலைவர்கள் எண்ணுகிறார்கள், பத்திரிகைகளும் எழுதுகின்றன.

அணுவைப் பிளந்த ஆட்டோ ஹான், அணு யுகத்தின் தந்தை என்று கருதப்படுகிறவர். ஹிரோஷிமாவை எண்ணும் போதெல்லாம் அவர் கண்கள் குளமாயின, இரவுகள் உறக்கமற்றவையாயின. ஜெர்மனி — அவரது தாய் நாடு — அணு ஆயுதங்களைத் தயாரிக்கும் உரிமையை விட்டொழிக்க வேண்டும் என 55 நோபல்பரிசு விஞ்ஞானிகளைக் கொண்டு அறிக்கை சமர்ப்பிக்கச் செய்தார். மறுபடியும் பதினெட்டு அணு விஞ்ஞானிகளைக் கொண்டு அதே போன்ற அறிக்கையை வெளியிட்டார். ஹிட்லருக்கு எதிராக அணுகுண்டு தயாரிக்குமாறு அமெரிக்க அரசை வற்புறுத்திய ஐன்ஸ்டைன் பின்னால் அணுகுண்டு விளைவித்த சேதங்களைக் கண்டு அடைந்த துயர் அளவிடற்கரியது.

அமெரிக்கா, ருஷ்யா, இரண்டுமே அணு ஆயுதங்களை ஒழித்து விட வேண்டும் என்பதில் கருத்து ஒருமித்து உள்ளன. ஆனால் யார் முதலில் எந்த அளவுக்கு ஒழிப்பது என்பதில்தான் பரஸ்பரச் சந்தேகங்களும் அச்சமும் இருந்து வருகின்றன. இரு வல்லரசுகளுமே அணு ஆயுதங்கள் உலகின் மற்ற நாடுகளிடையேயும் பரவுவதைத் தடுக்க முயற்சி மேற்கொண்டுள்ளன.

அணு ஆயுதங்கள் மட்டுமல்ல, அணு சக்தி மின் நிலையங்களாலேயே ஆபத்துக்கள் மிக அதிகம் என்பது அண்மைக் காலமாக நிரூபணமாகி வருகிறது. அணுமின் நிலையங்களின் கழிவுப் பொருள்களை ஆழக் குழி தோண்டிப் புதைத்தாலும் கதிரியக்கம் பரவி, சுற்றுச் சூழலை நச்சுமயமாக்க வாய்ப்புண்டு என்று உணர்ந்து மேற்கு ஜெர்மனியில் ஒரு வட்டார மக்கள் பெரிய அளவில் போராட்டமே நிகழ்த்தினர். அமெரிக்க அணுமின் நிலையம் ஒன்றின் இயக்கத்தில் ஏதோ கோளாறு ஏற்பட்டுக் கதிரியக்கம் பரவி விட்டது. சுற்று வட்டார மக்கள் பெரும் பீதியில் ஆழ்ந்து பலர் வீடு வாசல்களைக் கூடத் துறந்து சென்றனர்.

இவ்வாறான சூழ்நிலையில் எந்த ஒரு நாடும் அணுகுண்டுகளைத் தயாரித்துக் கொண்டிருப்பது தற்கொலைக்கு ஒப்பாகும். பாகிஸ்தானுடன் போட்டி போட்டுக் கொண்டோ அல்லது அதற்கு அஞ்சியோ நாமும் அணுகுண்டு தயாரிப்பில் இறங்க அவசியமில்லை. அணுகுண்டு தயாரிக்கும் ஆற்றல் தனக்கு இருப்பதாகப் பாகிஸ்தான் காட்டிக் கொண்டாலும் அணு குண்டை நம் மீது அது பிரயோகிக்கும் என்று கருத இடமில்லை. இரண்டாம் உலக யுத்தத்துக்குப் பிறகு வல்லரசுகளே ஈடுபட்ட எத்தனையோ பல யுத்தங்கள் நடந்திருப்பினும் அணுகுண்டுகள் எதிலும் பயன்படுத்தப் படவில்லை — ஹிரோஷிமா, நாகஸாகி பயங்கரங்கள் நினைவிருப்பதால். அந்தச் சோகக் கதையை பாகிஸ்தான் மறந்து விடும் என்றாலும் ஒருபுறம் ருஷ்யாவும் மறுபக்கம் அமெரிக்காவும் நமக்கு நேச நாடுகளாக இருப்பதால் அணு ஆயுதப் பாதுகாப்பை எளிதில் கோரிப் பெறலாம்.

நாமே அணுகுண்டு தயாரிப்பில் ஈடுபட்டு ஆபத்தை விலைக்கு வாங்க வேண்டியதில்லை.

அந்த வயக்காடு முழுவதுமே, பொன் பச்சை நிறத்தில் மின்னியது. நிறத்தைக் காட்டி, தன் நிலையைக் காட்டும், நெற் பயிர்கள், பச்சை நிறத்திலிருந்து, பொன் னிறத்துக்கு மாறத்துடிக்கும், இறுதிநிலைக்கு இந்தப் பொன் பச்சை நிறத்தில், சுடர் விட்டன. ''மூணுகோட்டை' பாசனம் கொண்ட அந்தக் கிணற்றின் சரல்குவியலில் நின்று, நிறம் மாறி, தன் நிலையைக் காட்டும் நெற்பயிரை, நிலத்தின் கேசங்கள் போல் தோன்றிய அந்த உணவுப்பயிர்களைப் பார்த்துக் கொண்டிருந்த வினைதீர்த்தான், சரலில் இருந்து இறங்கி, வரப்பு வழியாக, நடந்து தன் நிலத்துக்குப் போனான்.

நாலடி உயரங் கொண்ட நெற்பயிர் ஆடி அசையும் தன் வயலை மெய்ம்மறந்து பார்த்துக் கொண்டு நின்றான். பின்பு அருகம்புல் மொய்த்த வரப்பில் உட்கார்ந்து எதையோ யோசித்துக் கொண்டிருப்பவன் போல் 'குத்துக் கால்' போட்டு உட்கார்ந்தான். பின்னாலிருந்து வெட்டுக்கிளிகள் தாவுவதை வைத்து யாரோ வருவதைச் சத்தத் தடையம் இல்லாமலே புரிந்து கொண்டு, திரும்பிப் பார்த்தான்.

பெரும் புள்ளியான வீராசாமி, மோதிரக் கையை நீட்டிக் கொண்டே வந்தார். வயலைக் கருதியும், வசதியைக் கருதியும், வினைதீர்த்தான் எழுந்தான்.

''என்னடா... வெள நீர்த்தான்... எத நீக்கரத்துக்குடா... யோசனையில... இருக்குற...''

''ஒண்ணுமில்லே, மாமா! சும்மாத்தான்!''

''நானும்... சும்மாத்தான் கேக்கேன்... சும்மாச் சொல்லு.''

வினைதீர்த்தான் சிறிது தயங்கினான்; சிறிது நாணினான்; பிறகு, அவரைப் பார்க்காமலே;



# இரத்தத் துளிகள் பயிராகின்றன

சு. சமுத்திரம்

நெற்பயிர்களைப் பார்த்துக் கொண்டு பேசினான்.

''ஒண்ணுமில்லே.. ஒரு கிறுக்குத் தனமான எண்ணம் வந்துது... இந்த நிலத்தில... நெல்ல... நானே... விதச்சேன்... நாலஞ்சி வருஷமா அடமானத்துல இருந்த இந்தப் பூமிய... மீட்டி... ராவும் பகலுமா உழச்சேன்... இப்போ அதுகூட... எனக்குப் பெரிசாத் தெரியல... இந்த நெல் பயிருங்கள்... மூளைச்சதுல... இருந்து பார்த்துக் இட்டு... வாரேன்... எனக்கு... இதுவ... சொந்தப் பிள்ளைய மாதிரி தோணுது. நானே... வளத்த...

''ஒன் மகை... இளருண மனகன்னு, மாமாவுக்குத் தெரியாதா? ஒன் கையால... பன்னருவாள வச்சி அறுக்க... ஒனக்குச் சங்கடமா... இருந்தா... பேசாம... இந்த நிலத்தை மாமாகிட்டே குடுத்துடேன்.''

வினைதீர்த்தான், 'மாமா', ''விளையாட்டுக்குப் பேசுகிறார்'' என்று நினைத்து, அவரை விளையாட்டுத்தனமாய்ப் பார்த்தான். அவரும் லேசாகச் சிரித்தார். பிறகு விளையாட்டுக்குச் சொன்னவர் போல், ''எழுந்திருடா... காலங் காத்தால... உரத்தப் போடுறத வுட்டுப் புட்டு... தத்துவம் பேசுறான்... தத்துவம்'' என்று சொல்லி விட்டுத் தூரத்தே தெரிந்த ஒரு சிவப்புச் சேலையைப் பார்த்து, ஓடாத குறையாக நடந்தார்.



இந்த நெல் பயிரை இன்னும் ரெண்டு மாசத்துல.. நானே அறுக்கப்போறேன். இத... நினைச்சிப் பாக்கவே... கஷ்டமா... இருக்கு...''

வீராசாமி, சிரித்தார்.

''மாமா... நீரு நல்லாயிருப்பியரு... நான் சொன்னத... ஊர்ல சொல்லிடாதயும்... அப்புறம் நான் தலைகாட்ட முடியாது... எல்லாப் பயலுவளும் என்னைப் பார்த்துச் சிரிப்பாங்க... ஏற்கனவே... ஒருமாதிரி பார்க்கரானுக.''

வீராசாமி, இப்போது சிரிக்கவில்லை. அவனைப் பார்த்தார். பிறகு ஆறுதல் சொன்னார்.

நாலைந்து நாட்கள் ஓடின.

'ம்' உரத்தை ஓர் ஓலைப்பெட்டியில் வைத்து, தோளில் சாய்த்து அணை கொடுத்தவாறு, வயலுக்குப் போய்க் கொண்டிருந்த வினைதீர்த்தானைப் பார்த்ததும், டிராக்டரை ஓட்டிக் கொண்டு வந்தவனை ''நில்லுடா'' என்று சொல்லி நிறுத்தி, பின்னால் உட்கார்ந்திருந்த வீராசாமி, வினைதீர்த்தானையும் ஏற்றிக் கொண்டார். நேரடியாகவே கேட்டார்.

''என்னடா... நான்... சொன்னத... யோசிச்சுப் பார்த்தியாடா...''

''நீரு... என்ன... சொல்லுறீரு?''

''அதாண்டா... ஒன் நிலத்த தாரியான்னு கேட்டேனில்ல? மரக்காலுக்கு ஆயிரத்து இருநூறு ரூபாய் தாரேன்''

''மாமா... ஒமக்கே... இது நல்லா இருக்கா.''

''என்னடா பவுசு பண்ணுற... இந்த மூணு மரக்கால் விதப்பாட்ட வச்சிக்கிட்டு,

என்னடா பண்ணப்போற? தோட்ட கட்டப் போறியாக்கும்... மாமாவுக்குத் தந்தியான்னு எனக்குச் சேந்தாப்போல இருக்கும்... டிராக்டர நிறுத்தறதுக்கு... வசதியா இருக்கும்.''

''அதோட நான் நடுத் தெருவில... நிக்கதுக்கும் வசதியா இருக்கும்...''

''என்னடா... வாயு... நீளுது.''

''பின்ன என்ன மாமா... நிலத்த... ஒம்ம மச்சினங்கிட்ட... ஆயிரம் ரூபாய்க்கு அடமானம் வச்சேன்... பணத்த வச்சிக்கிட்டு ஏதோ... சந்தைக்குச் சந்தை போயி... மசாலா சாமான்கள் வித்து... வயித்தக் கழுவுனேன்... 'என் மச்சினன்... அந்த மூணு மரக்கால் விதப்பாட்டுல... நீரு நெல்லு போட்டா... கரும்பு போட்டும்... வரப்ப வெட்டியும்... அட்டூழியம் பண்ணுண்டா... மாமாவுக்காவது... ஒன் நிலத்த திருப்பு'னு சொன்னதை வச்சி... தோட்டத்த வித்து... இத மீட்டுனேன்... இப்ப... அரசன... நம்பி... புருஷன... விட்டது மாதிரி... தோட்டத்த விட்ட என்னே வயலயும்... விடச் சொன்னு... என்ன மாமா அர்த்தம்? நீங்க மட்டுந்தான் வயலு வச்சிக்கணுமா? அப்படியாவது சர்க்காருல... ஒரு சட்டத்தைப் போடச் சொல்லும்.''

''ஒன்னு கேட்டதுக்கு... ஒம்பது சொல்றியா... நீ எவ்வளவு... நாளைக்கி... வயல வச்சிருக்கன்னு பாத்துப் புடலாம்டா...''

ஒரு வாரம் ஓடியது.

வீராசாமியின் 'மூப்பத்திரண்டு' மரக்கால் விதப்பாட்டிலும், துள்ளிக் குதித்து நீர் பாய்ந்தது. வயல் முழுவதும் நீர் பாய்ந்து விட்டதும், பம்ப் செட் அறைக்குப் போய் என்ஜினை 'ஆப்' செய்துவிட்டு, கதவை மூடப்போனார். அலறிக் கொண்டு வந்தான் வினைதீர்த்தான்.

''எதுக்கு மாமா... ஆப் பண்றீயரு?''

''என் என்ஜின... ஆப் பண்ண ஒன்கிட்ட கேக்கணுமா...''

''மாமா ஒமக்கே...இது நல்லா இருக்கா... என் வயலுக்கு... தண்ணி பாயாண்டாமா? கமலக் கிடங்கு ஒமக்கும்... எனக்கும் பொதுச் சொத்து... அது இருந்ததாத்தான் நான்... மாட்டை வச்சி... கமல அடிக்க முடியும்... மாடு வாங்கப் புறப்பட்ட என்கிட்ட... என்ன சொன்னீயரு? 'ஏய்... மூணு மரக்கால் விதப்பாட்டுக்கு... என் பம்ப் செட்டுலேயே ... தண்ணி பாய்ச்சிக்க... கமலக் கிடங்க... மூடி, நான் அதுல பயிர் வைக்கேன்... ஒனக்கும் தண்ணி கிடைச்சது மாதிரி ஆச்சு... எனக்கும், கொஞ்சம் நிலம் கிடைச்சது மாதிரி ஆச்சு'ன்னு சொன்னீரு... இப்போ கமலக் கிடங்கயும் எடுத்துக்கிட்டு... பம்பு செட்டையும் மூடுனு... என்ன மாமா அர்த்தம்?''

''ஒன் கமலக் கிடங்கோட பங்கு எனக்கு வேண்டாம்... ஒனக்கு அதுல... மூணடி வரும்... தாராளமா எடுத்துக்க...''

# க்ளோஸ் அப்



டி. எஸ். ஸ்ரீனிவாசன்

டி. வி. எஸ். குருப்பைச் சேர்ந்த பாடி நிறுவனங்களின் தலைவரான திரு டி. எஸ். ஸ்ரீனிவாசன் மறைந்து விட்டார். எந்த ஒரு தொழிலாளியும் டெலிபோனிலோ, நேரடியாகவோ அவருடன் தொடர்பு கொள்வது சாத்தியமாயிருந்தது.

ஒரு முறை பாடி நிறுவனங்களின் தொழிலாளர்கள் சிலர் தற்காலிக வேலை நீக்கம் செய்யப் பட்டிருந்த போது, குடும்பநல அறுவை சிகிச்சை செய்து கொண்ட சிலருக்கு உதவித் தொகை வழங்கலாமா கூடாதா என்ற பிரச்னை எழுந்தது. ''கண்டிப்பாய் வழங்கவேண்டும்'' என்று உத்தரவிட்ட சீமா, மற்ற எந்தத்தொழிலகங்களிலும் ஏன், அரசேகூட அனுமதிக்காத அளவில் இந்தத் திட்டத்தின் கீழ் உதவித் தொகையாக ஐந்நூறு ரூபாய்களை வழங்குகிற ஏற்பாட்டைச் செய்திருந்தார். தினக்கூலி என்னும் ''காஷுவல்'' தொழிலாளர்களுக்குப் பரவலாக வழங்கப் படும் நாள் கூலி ஆறு ஏழு ரூபாய்களாகவே உள்ளது. ஆனால், பாடி நிறுவனங்களில் பன்னிரண்டு ரூபாயாக இருந்த இந்தக் கூலி இப்போது பதினைந்தாக உயர்த்தப் பட்டுள்ளது. ''இந்தச் சம்பளத்துக்குக் குறைந்து குடும்பமும் நடத்தி வேலையும் செய்ய யாராலும் முடியாதே'' — என்பாராம் சீமா.

சுந்தரம் கிளேட்டனில் டெப்டி பர்ஸனல் மானேஜராகப் பணியாற்றும் ஸ்ரீ டி. எஸ். இராஜாமணி கூறியது.

● கோபாலபுரம் இல்லத்தின் முகப்பில் ''மு. கருணாநிதி'' என்று பெயர்ப் பலகை பதித்திருந்தாலும், கலைஞர் மு. கருணாநிதி ''ணு'' என்றேதான் கையெழுத்துப் போடு கிறார்.

பெரியார்



இந்தப் புதிய எழுத்து முறையை அறிமுகம் செய்த பெரியார் எழுதும் போது நம்மைப் போலவேதான் ''லை'' 'னை' 'ணு'' என்று எழுதுவார் என்பதும் அச்சுக் கோக்கும் போதுதான் ''சீர் திருத்த'' முறையில்

''மாமா... நீரு பேசறது நியாயமில்ல... கதவ... உடைக்க... அதிக நேரம் ஆவாது மாமா...''

''எங்க... உடடா... பாக்கலாம்?... இத.. உடச்சிட்டு... நீ... ஊர்ல... இருந்துட றதைப் பார்த்துடலாம்...''

என்ன செய்வது என்று புரியாமல், தலையில் கையை வைத்துக் கொண்டு, தன் வயலின் பரப்பில் உட்கார்ந்திருந்த வினைதீர்த்தான், நாளைக்கு வாடிப் போகப் போகிற பயிர் களுக்காக வாடி வதங்கியபடி, ஊர் முகப் புக்குள் வந்தபோது, அங்கே சில வரவேற் பாளர்கள் நின்றார்கள். வீராசாமியின் கோப சாமிகள். உறவுக்குக் கைகொடுக்கும் கை யாட்கள். வினைதீர்த்தானின் முன்னால் வந்து ஒருவன் வழிமறித்தான். வார்த்தைகள் தடித்தன. அடியாட்களாயிற்றே.

''இன்னுமாடா... பேசிக்கிட்டு... இருக் கே... தூக்கிப் போட்டு மிதிங்கல...''

இதற்குள் கூட்டம் கூடி விட்டது. வினை தீர்த்தான் அடிபடப் போவதற்கு முன்னால், நல்லவேளையாக நாலைந்து பேர் கூடிவிட் டார்கள். அடிபடப் போனவன் முறையிட் டான்.

அடிக்கப் போனவர்கள் மிரட்டினார்கள்.

இரண்டு நாட்கள் போயின.

வினைதீர்த்தானின், நெற்பயிர்கள் சவலைப் பிள்ளைகளாயின. நெற்கதிர்கள் கருங்கத் துவங்கின. செடிகளின் அடிப்பாகம், உலரத் துவங்கியது. அன்றைக்குத் தண்ணீர் பாய வில்லையானால் வைக்கோல்கூட கிடைக்காது.

பம்ப் செட்டை 'ஆப்' செய்துவிட்டு, கதவை மூடிய வீராசாமியை வினைதீர்த்தான் கண்கள் குளமாகப் பார்த்தான். தன் வயல் பக்கம் வந்தான், பயிர்களைப் பார்க்கப் பார்க்க, தன் பத்து வயது மகன் மரணத்துடன் போரா டிய காட்சி, அவனுக்கு நினைவுக்கு வந்தது. அன்று கண்ணுக்குத் தெரியாத எமனை, சபித்த அவன், கண்ணுக்குத் தெரிந்த இந்த எமனை, 'பாத்துட வேண்டியதுதான்' என்று மண்வெட்டியை எடுத்துக் கொண்டு புறப் படப்போனபோது மாடக்கண்ணு மச்சான் வந்தார். பக்கத்து வயல்காரர். 'நாலு மரக் கால்' விதப்பாட்டில் நாள் முழுதும் போராடு பவர்.

''ஏழுலை... பித்துப் புடிச்சி நிக்குற... என் கெணத்துல... அரநாள்... இரவ எனக்கு வரும்... அதுல... ரெண்டு நாழிய... நீ... எடுத்துக்கடா... என் வாய்க்கால் தண்ணி ஒனக்குப் பாயுமே...''

''மாடு... இல்லியே... மச்சான்...''

''யாரு கிட்டயாவது கேளு... என் மாடு கெழடு... அரநாள் தாங்காது... மாடு கெடைக் காட்டா... இருக்கவே... இருக்கு... என் மாடு.''

வினைதீர்த்தான், கரையில் போய்க் கொண் டிருந்த வீராசாமியை, அலட்சியமாகப் பார்த்தான். பயிர்களை வாஞ்சையோடு

# குளோஸ் அப்



புட்டோ

உருமாறும் என்பதும் சுவையான செய்தி. நீண்ட நாள் பழக்கம் காரணமாய் அவரால் தம் எழுத்தை மாற்றிக் கொள்ள முடியாதிருக் திருக்கலாம். இதற்கு ஆதாரம் பெரியார் ஈ. வே. ரா. சிந்தனைகள் என்னும் நூல்.

● புட்டோ ஒரு கவி ஞரும்கூட. மேலும் சில சுவையான தகவல்கள் ''ஸண்டே'' கட்டுரை களில்வெளிவந்துள்ளன.

பிரபல இந்திப் படத் தயாரிப்பாளர் ஆஸிப் ஒருமுறை நடிகை நர்கிஸிடம் சொன் னாராம்: ''முகலே ஆஜம் படம் தயாரான போது என்னுடன் ஒரு இளைஞன் வருவானே, அவன் இப்போது பெரிய அரசியல்வாதியாகி விட்டான் தெரியுமா?''

அந்த இளைஞன் புட்டோ, தேர்தல் தந்தி ரங்களில் இணையற்றவர் என்பதை விளக்க லாகூரில் வழங்கும் ஒரு ஜோக்:

''டில்லியிலிருந்துஇந்திராகாந்தி அனுப்பிய தூதர் ஒருவர் பூட்டோவைச் சந்தித்தா ராம். 'உங்கள் தேர்தல் கமிஷனரை இந்தியா வுக்கு அனுப்புங்கள். பதிலுக்கு காஷ்மீரையே தந்து விடுகிறோம்' என்றாராம்!''

● ''ரெஸ்டாரண்ட்' என்பது சரியான உச்ச ரிப்பில்லை. ''ரெஸ்ட்ரான்'' என்றுதான் சொல்ல வேண்டும்'' என்று கூறும் சுந்தா, 'பொன்னியின் புதல்வர்' வரலாற்றை எழுதிய போது புதிய சொற்களைப் பயன்படுத்தினார். ''இன்ஃப்ளுவன்ஸ்'' என்பதை 'அளாவல்' என்று மொழிமாற்றினார்.

சுந்தா இப்போது என்ன செய்கிறார்?

சில மாதங்களுக்கு முன்னால், மத்திய அரசு அமைத்த பத்திரிகைக் கமிஷனுக்காகத் தமிழில் வெளிவரும் குடும்பப் பத்திரிகை களைப் பற்றி விரிவாய் ஆராய்ந்து அறிக்கை தயாரித்துக் கொடுத் தார். இப்போது சாகித் திய அகாதமிக்காக அம ரர் கல்கியைப் பற்றிய சிறு வரலாற்று நூல் ஒன்றை ஆங்கிலத்தில் எழுதிக் கொண்டிருக் கிறார்.

தொகுப்பு: 'யெஸ்பாலு'

சுந்தா



பார்த்தான். வாடகை 'இரவைக்காக' நாலைந்து பேரைப் பார்த்தான். ஆசாமிகள் நழுவிவிட்டார்கள்.

என்ன செய்வதென்று தெரியாமல் வினைதீர்த்தான் ஓடினான். சத்திய ஆவேசத்துடன். அந்த ஆவேசமே ஓர் உந்தலாக, வயலைப் பார்த்து ஓடினான். தண்ணீர்க் கொடுக்க முன் வந்த மாடக்கண்ணு விழுந்து கிடந்த ஒரு கிழட்டு மாட்டின் வாலைக் கடித்து அதை, எழுப்பப் பார்த்தார். மாடு நகருவதாகத் தெரியவில்லை.

வினைதீர்த்தான் ஓடினான். தன் வயலை நோக்கி ஓடினான்... விதவைப் பெண்போல், பதவியிழந்த அரசியல்வாதி போல, பட்டினி கிடந்த குழந்தைபோல, நெற்பயிர்கள் கருகப் போவதுபோல் தோன்றின. பக்கத்து வீராசாமி வயலில், நெற்பயிர்கள் 'பேபிஷோ' காட்சிபோல் தோன்றின. நீர் விரைந்து பாய்ந்துகொண்டிருந்தது.. அவற்றின் அருகில் நின்ற வீராசாமியும், அவரது வகையறுக்களும் ''அடுத்த... பருவத்துல... இந்த ஒரு தட்டுலயும்... வாகை மரத்தயும்... முருங்க.. மரத்தயும்... வச்சிடணும்'' என்று வினைதீர்த்தானுக்குக் கேட்கும்படியாக, கேட்க வேண்டும் என்னும்படியாகப் பேசினார்கள்.

வினைதீர்த்தானால், தாள முடியவில்லை, தாங்க முடியவில்லை.

''ஏய்... அற்பப் பயலுவளா... என் வயல... கருக்குனதுமில்லாம... நான் அடுத்த வருடத்துலயும்... பயிரிடாம போறதுக்காக... மரத்த வச்சி... என் வயலுக்கு... இருட்டடிப் போறியளா... செய்யுங்கடா... அனிக்கப் பணமும்... அம்பலத்துக்கு ஆளும் இருக்குற திமுறுலயாடா ... பண்ணு நீங்க... பண்ணுங்கடா. ... ஊரு கேக்காட்டாலும்... உதிரமாடன் கேக்காம... போக மாட்டாண்டா...''

அவ்வளவுதான் –

வீராசாமி நல்ல மனிதர். ஆகையால் எதுவும் பேசவில்லை. அவரது கையாட்கள், காலாட்கள் வந்தார்கள். வினைதீர்த்தானின் வயலை மிதித்துக் கொண்டே வந்தார்கள். இருவர், வினைதீர்த்தானின் கைகளையும், கால்களையும் பிடித்துக் கொள்ள, எஞ்சிய மூன்று வீரர்கள், அவனை எட்டி உதைத்தார்கள். மண் வெட்டிக் கணையால், வாயில் குத்தினார்கள். வயிற்றில் இடித்தார்கள். அடுத்த கணைப்போடு, குறுக்குகளை நிமிர்த்திக் கொண்டு, அவர்கள் இளைப்பாறப்போனபோது, வினைதீர்த்தான் வயலில் சுருண்டு கிடந்தான். வாயில் பொங்கிய ரத்தம், வயலை நனைத்தது. வயிற்றில் துளிர்த்த ரத்தத் துளிகள், நெற்பயிரில் பட்டன.

வினைதீர்த்தான் ஓடினான். வயலில் இருந்து வீட்டுக்கு வராமலே ஓடினான். அருகேயுள்ள சட்டாம்பட்டிக்கு ஓடினான். அங்கே வல்லமை பொருந்திய 'சண்டியர்' மிராசுதாரும், வீராசாமியை எப்படிக் கையைக் காலை ஒடிக்கலாம் என்று குறிபார்த்து இருப்பவருமான ராஜதுரையிடம், மூச்சிரைக்கப் போய் நின்றான்.

''கும்பிடுறேன் அய்யா...''

''என்ன விஷயம் வினைதீர்த்தான்...''

''என் மூணு மரக்கால் விதப்பாட்ட நீங்க எடுத்துக்கணும்.''

''பணம் இல்லியே.''

''எவ்வளவு வேணுமுன்னாலும் தாங்க..''

''எந்தப் பக்கமா இருக்கு.''

''ஒங்க... மருமகனைச் சந்தையில... ஆள் வச்சி அடிச்சாரு பாருங்க... வீராசாமி... அவரு... வயலுக்குப் பக்கத்துல... பொது வரப்பு... பொதுப் பாசனம்...''

''அப்படின்னா... வாங்கிக்கிறேன். இந்த மூணு மரக்கால் விதப்பாட்ட வச்சி... அவன் மூணு கோட்டையையும்... பொட்டல் காடாக்கப் போறேன்... பாரு... மரக்கால் ஆயிரம் ரூபாய்தான் சரியா...''

''தப்போ... சரியோ... நிலத்த... ஒங்க கிட்ட கொடுத்தே ஆகணும்...''

சட்டாம்பட்டிக்கும் குட்டாம்பட்டிக்கும் முட்டாப்பகை – வீராசாமியும் ராஜதுரையும் தங்கள் 'எக்காளத்தை'த் திருப்திப்படுத்துவதற்காக, ஊர்ச்சண்டையை நடத்தியவர்கள். ஒருகொலை கூட விழுந்திருக்கிறது. வீராசாமியைவிட, எல்லா வகையிலும் வல்லவரான ராஜதுரை, வினைதீர்த்தான் நிலத்தை ஒரு மலைப்பாம்பின் நோக்கோடு வாங்கிப் போட்டார். இப்போது, ஊர்க்காரர்களில் சிலர், வினைதீர்த்தானைச் சாடினார்கள்.

''நிலத்தை ஊரவிட்டு... ஊர்ல போயாடா... விக்கது?... சட்டாம்பட்டிக்காரன்... கொலகாரப் பாவி... நம்ம வீராசாமிய... கஷ்டப்படுத்துனால்... நாம் பாத்துக்கிட்டு இருக்க முடியுமா? ஒன்னால... ரெண்டு ஊருக்கு இடையிலயும் குத்துப்பழி... வெட்டுப்பழி வரப்போவுது.''

வினைதீர்த்தான் சிரித்தான்.

அதேசமயம், விதைக்கும் போது தந்தையாகவும், நாற்றிடும்போது தாயாகவும், உரமிடும்போது ஆசானாகவும், களையெடுக்கும் போது காவலனாகவும், நீரிடும்போது தோழனாகவும் இருந்து, கண்ணுக்குக் கண்ணாய்ப் பராமரித்த - வயலை தன் சொந்த வயலை நினைத்தும் அழுதான். சத்தியம் சத்தம் போடாது என்பதுபோல், அவன் சத்தம் போடாமலே அழுதான்.

ஒரு பண்டாரம்: ஏன் இப்படித் திருதிருன்னு முழிக்கிறே?

மற்றொரு பண்டாரம்: என் திருவோட்டை எவனோ திருடிக்கிட்டுப் போயிட்டான். கே. ஆர். எம்.



# கோடைச் சிரிப்பிதழ்: பரிசுத்திட்ட முடிவு



மனோரமா முதுகெலும்பின் கீழ்ப் பகுதியில் தோன்றும் ஒரு வலியால் அவதிப் பட்டுக் கொண்டிருந்தார். (ஸ்பான்டிலைட்டிஸ்.) கருணிராஜன் இரவெல்லாம் ஷூட்டிங்கில் ஈடுபட்டிருந்து ரொம்பக் களைத்துப் போயிருந்தார். ஒருவர் வலியை மறக்கவும், இன்னொருவர் சோர்வை நீக்கவும் கல்கி வாசகர்கள் துணை புரிந்தார்கள். கோடைச் சிரிப்பிதழில் இடம் பெற்றிருந்த ஏராளமான துணுக்குகளைப் படித்து இருவரும் வாய் விட்டுச் சிரித்தனர்.

நீண்ட நேரம் ஜோக்குகளைப் படித்து, தரம் பிரித்து, கடைசியில் பின் வரும் ஐந்து ஜோக்குகளை வரிசைப் படுத்தித் தந்தனர்.

| வரிசை | பக்க எண் | எழுதியவர் பெயர் |
|---|---|---|
| 1 | 52 | சூடாரமணி |
| 2 | 53 | மூர்த்தி |
| 3 | 31 | ஜெயந்தி |
| 4 | 14 | மஹாலக்ஷ்மி |
| 5 | 20 | கல்யாண சுந்தரம். |

இவற்றுள் முதல் மூன்று ஜோக்குகளும் முறையே முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகளைப் பெறுகின்றன.

வாசகர் தீர்ப்புக்களை ஆராய்ந்த போது மனோரமா– கருணி தேர்ந்தெடுத்த அதே ஐந்து ஜோக்குகளையோ அல்லது அவற்றில் நான்கினையோ தேர்ந்தெடுத்த வாசகர் யாருமில்லை. மனோரமா – கருணி தீர்ப்புடன் ஒத்துப் போகிற மாதிரி மூன்று ஜோக்குகளைத் தேர்ந்தெடுத்தவர் ஆறுபேர். இந்த ஆறு பேரிலும் மூன்று ஜோக்குகளையும் மனோரமா – கருணி தீர்ப்பின்படியே சரியான முறையில் வரிசைப் படுத்தியவர் ஒருவர்தான். எனவே பரிசுத் தொகையைப் பிரித்து, முதல் பரிசாக மூன்று ஜோக்குகளைச் சரியானபடி வரிசைப் படுத்தியவருக்கு ரூ 250ம் மூன்று ஜோக்குகளைச் சரியாகத் தேர்ந்தெடுத்து ஆனால் சரியாக வரிசைப் படுத்தாத மற்ற ஐவருக்கும் தலா ரூ 50ம் பரிசாக வழங்குவதென முடிவு செய்தோம்.

### பரிசு பெறுவோர் விவரம்:

ஜோக்குகளுக்காக:

#### முதல் பரிசு

சூடா ரமணி
B 299, சென்னைத் துறைமுக ஊழியர் காலனி
தண்டையார்பேட்டை, சென்னை–81

#### இரண்டாம் பரிசு

எஸ். பி. கே. மூர்த்தி
145, மெயின்ரோடு,
காமராஜ நகர் சென்னை–71

#### மூன்றாம் பரிசு

எஸ். ஜெயந்தி,
B 3/43, கைலாசபுரம்,
திருச்சி.

#### வாசகர் தீர்ப்பு

ரூ 250 - பெறுபவர்:
கு. ராஜகோபால்,
835, ஆர். ஜி. வீதி,
கோயமுத்தூர்–1

தலா ரூ. 50 பெறுவோர்:

(1) ஆர். ஷெலின், 1 பர்வதவர்த்தனி தெரு, நாகர் கோயில் (2) ஏ. காமேஷ், வடக்குத் தெரு, கீரனூர், கொல்லுமாங்குடி (வழி) (3) இரா. மாணிக்கம், சிங்கம் பேட்டை, பவானி தாலுக்கா. (4) சாரதா ஜனார்த்தனம், P 72B, ஸ்ரீதர் சங்கர் ரோடு, கல்கத்தா–29. (5) ஆர். பானுமதி 47B, ராமகிருஷ்ண நகர், கல்லுக்குழி, திருச்சி–620020.

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

## ஜெயகாந்தன்

### 8. விருந்தோம்பல்



சிங்காரத்தின் தமக்கையின் கல்யாணம் மிகவும் சிறப்பாக நடந்தது. அந்த மாதம பூராவும் சிங்காரத்துக்குச் சொந்தமான எல்லா வீடுகளிலும் விருந்தினர்கள் வந்து நிறைந்திருந்தனர். சொந்தக் காரர்கள் எல்லாருமே மருடேசன் பிள்ளையைப் போன்றே வீர சைவர்கள். எனவே மருடேசன் பிள்ளையின் பெண் மக்களும் சிங்காரமும் இந்த ஒரு மாத காலமாய் நிர்ப்பந்த சைவர்களாய் வாழ நேர்ந்தது. கல்யாணம் ஆகிப் பெண் புருஷன் வீடு போய்ச் சேர்ந்த பிறகும் சில சொந்தக் காரர்கள் இன்னும் இருந்தனர். ஒவ்வொருவரும் புறப்படும் போது சிங்காரத்திடம் வந்து ஒரு வேளையாவது அவனோடு சேர்ந்து சாப்பிட வேண்டுமென்று தவங்கிடப்பது போல் காத்திருப்பர். 'நீங்கள் சாப்பிட்டாச்சா?... இல்லையா? அடேய் யாரங்கே?... மடையா! பந்தி போடு...' என்று ஏக அமர்க்களப்படுத்தி வந்தவர்களை உபசரித்துச் சாப்பிட வைப்பான் சிங்காரம்.

''நீயும் உட்காரு தம்பி'' என்று எவ்வளவு பெரியவர்கள்தானாகட்டுமே, அவர்கள் என்ன அன்போடுதான் அழைக்கட்டுமே — அது மட்டும் நடக்காது.

''இப்பத்தான் சாப்பிட்டேன்'' என்று பொய் சொல்லுவான் சிங்காரம். பரிமாறுகிறவனுக்குத் தெரியும் எஜமான் இன்னும் சாப்பிடவில்லை என்று. ஆனால் காட்டிக் கொடுக்க முடியுமோ?

''கொஞ்சம் பாயசமாவது சாப்பிடுங்க'' என்று வெள்ளித் தம்பளரில் பால் பாயசத்துடன் வந்து நின்று சிங்காரத்திடம் கெஞ்சுவான்...

''ஓ! பால் பாயசம்தானே! என்ன திவ்வியமா இருக்கது... அவங்களுக்கும் தம்ளரிலே குடு!'' என்று சொல்லி ஒரு மிடறு பருகி, ருசியைச் சிலாகித்து விட்டுப் பரிசாரகனிடமே தம்ளரைத் திருப்பித் தந்து விடுவான்.

''என்னங்க அப்படியே தந்துட்டீங்க'' என்று சொல்ல முடியுமா? யார் சாப்பிட வேண்டுமென்று ஆசையோடு சமைக்கிறார்களோ அவன் சாப்பிட்டதாகப் பொய் சொல்லி ஏமாற்ற, யாராரோ வந்து ரசித்துச்

சாப்பிடுவதைப் பார்த்து வரும் பொருமலைக் கோதையிடம் கொட்டிப் புலம்புவார்கள் வேலைக்காரர்கள்.

அதற்குமேல் விருந்தினர்கள் சிங்காரத்திடம் விடை பெற்றுக் கொள்ள வருவார்கள்.

''அதெல்லாம் சும்மாப் பேச்சு... இன்னக்கி நீங்க ஒண்ணும் போக முடியாது... அக்கா கல்யாணத்துக்கு வந்த நீங்க இனிமே எப்ப வருவீங்களோ?... இன்னக்கித் தெற்கே பிரயாணம் போகக் கூடாது — இருங்க இருங்க!... நான் கொஞ்சம் அவசர வேலையா போய்க்கிட்டிருக்கேன்; சாயங்காலம் வந்து அப்பறமா போகறதைப் பத்திப் பேசலாம்..'' என்று அவர்களை வலுக் கட்டாயமாய்த் தங்க வைத்து விட்டுச் சிங்காரம் வண்டியிலேறிப் போய் விடுவான்.

சிங்காரத்தின் தாராள குணத்தையும், ஜாதி ஜனங்கள் மேல் அவனுக்கிருக்கும் அபிமானத்தையும், அந்த விருந்தினர்கள் வீட்டையும் தோட்டத்தையும் சுற்றிச் சுற்றி வந்து புகழ்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள்.

அவர்கள் கடைசியில் ஒருநாள் ஊருக்குப் போய்த்தான் ஆக வேண்டும் என்று அழமாட்டாக் குறையாகச் சிங்காரத்திடம் வந்து கெஞ்சுவார்கள். இவ்வளவு அன்பு காட்டுகிற இவனுடைய வேண்டுதலை மீறிப் போக வேண்டியிருப்பதற்காக அந்த ஆண்களுடன் வந்து நிற்கும் அந்தக் கிராமத்துப் பெண் மக்கள் கண்ணீர் சிந்தி விடைபெற்றுக் கொள்ளுவார்கள். அவர்கள் போய்த்தான் தீருவார்கள் என்று தெரிந்து கொண்ட பிறகு சிங்காரம் உள்ளே போய்த் தன் பிதுரார்ஜித





ஸ்ரீரே பிலிம் ஷோ பரிசளிப்பு விழாவில் நடந்த நிகழ்ச்சியில் எல்லோருக்கும் டிக்கெட் விற்கப் பட்டு அதிலிருந்து ஒரு டிக்கெட் குலுக்கி எடுக்கப்பட்டுப் பரிசு கொடுக்கப்பட்டது. "இப்பொழுது பரிசு டிக்கெட்டை அதிருஷ்ட தயாரிப்பாளர் குல்ஷான் ராய் எடுப்பார்" என்று அறிவிப்பாளர் கூறினார். மேடை ஏறிய குல்ஷான் ராய் "இங்கு கூறியபடி நான் அதிர்ஷ்டக்காரனாக இருந்தால் நான் வாங்கி இருக்கும் டிக்கெட் நம்பர் வர வேண்டும்" என்று கூறிவிட்டு, பெட்டியிலிருந்து ஒரு சீட்டை எடுத்து, பிரித்து நம்பரைப் படித்தார். அது அவருடைய டிக்கெட் நம்பர்!

பிலிம் இண்டஸ்ட்ரி ஜர்னல்

- பாபு

கருவறைக்குள் பகலானாலும் கையில் விளக்குடன் போவான்.

அந்த இருண்ட அறையினுள், அந்த வீட்டில் எங்குமில்லாத குளுமை நிலவும். சந்தனத்தின் மணம் மருதேசன் பிள்ளையின் நினைவைச் சிங்காரத்தினுள் மலர்விக்கும்.

அந்த அறையின் நடுவில் ஒரு பெரிய மரத்தாலான கட்டில். அது மருதேசன் பிள்ளைக்குக் கூட உரியது அல்ல, அவரது தகப்பனார் பெரியசாமிப் பிள்ளைக்குக் கூட அல்ல; அவரது பாட்டனார் ஒருவருக்கு உரிய கட்டில். கட்டிலைப் பார்த்தாலே இதில் படுக்கிற மனிதரின் ஆகிருதி தெரியும். அதன் மீது இப்போது படுக்கை இல்லை; ஒரு பிரப்பம் பாய் மட்டும் விரிக்கப் பட்டிருக்கிறது.

அந்தக் கட்டிலைத் தள்ளினால் அதன் கீழே யுள்ள நிலவறையின் கதவு திறக்கும். அதில் உள்ள ஏணியின் வழியே நாலுபடி இறங்கி வலதுபுறத்தில் உள்ள விளக்குத் தண்டில் கைவிளக்கை மாட்டிவிட்டு அந்தப்படியி லேயே ஓர் ஆசனம் போல் உட்கார்ந்து கொண்டு இரும்புப் பெட்டியைத் திறக்கலாம்; அதனுள்ளே பூர்வ தலைமுறை சேர்த்து வைத்த பொன்னும் மணியும், ஆபரணங்களும், காசுகளும், ரூபாய் நோட்டுக்கள் தவிர—நிறையவே குவிந்து இருக்கும்! அந்தக் களஞ்சியத்திலிருந்து எடுப்பதையும் போடுவதையும் குறிக்கப் பேரேடும், மைக் கூடும் இறகுப் பேனாவும் இருக்கும். — சிங்காரத்தின் மூதாதையர் எத்தகைய செல்வந்தர்கள் என்பதற்கும், எவ்வளவு சிக்கனமும் பாதுகாப்பும் உள்ளவர்கள் என்பதற்கும் இவை சாட்சிகளாய் மறைந்திருந்தன.

அந்தக் கருவறையினுள் கோதை கூட இதுவரை வந்ததில்லை. 'அங்கே என்ன இருக்கிறது! அதிலே இவன் ஏதும் சேர்த்து வைக்கத் தான் அடிக்கடி போகிறானோ? அல்லது அதைச் சூறையாடுவதற்காகவே போகிறானோ?' என்ற பதைப்புடன் அவன் அந்த நிலவறையிலுள்ள கருவறைக்குப் போவதையும் வருவதையும் மட்டும் மௌனமாக — உதடுகளை இறுகக் கடித்து மூடிக் கொண்டு பார்த்த வண்ண மிருப்பாள் கோதை.

விருந்தினர்களைக் கொண்டு போய் ரயி லேற்றி விடுவதற்காகத் தெரு வாசலில் வண்டி நின்று கொண்டிருக்கிறது. கைப்பை நிறைய அள்ளிக் கொண்டு வரும் வெள்ளிக் காசுகளைக் குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் அன்பளிப்பாக அள்ளிக் கொடுத்து வழியனுப்பி வைக்கிறான் சிங்காரம்.

## தர்ம சங்கடம்

## திம்பு!



கல்யாணத்துக்கு வந்திருந்தோரின் சந்தடிகள் அடங்குகிற வரை சிங்காரம் அக்கரைப் பக்கத்தை நினைக்காமலே இருந்தான். விருந்தினர்களெல்லாம் போன பிறகு ஒருநாள் மருடேசன் வீட்டுப் பெண் மக்கள் வழக்கம் போல் மகாசபை கூட்டினார்கள். வெள்ளையம்மாள் வந்திருந்தாள். இடையில் அவள் எத்தனையோ தடவை கல்யாண வேடிக்கை பார்க்கும் கும்பலோடு தெருவில் தான் வந்து நின்றிருந்தாள். அப்போதெல்லாம், வைரமும், சரிகையுமாக ஜொலிக்கும் சிங்காரத்தைத தூரத்திலிருந்து அவள் மட்டுமே பார்த்துப் பார்த்துப் பூரித்தாள். அவன் அவளை நினைக்கவோ பார்க்கவோ இல்லை.

இப்போது வீட்டுக்குப் பின்னால் வெள்ளையம்மாள் கோதையிடம் பேசிக் கொண்டிருக்கும் குரல், உள்ளே தனது தனியறையில் உட்கார்ந்து சித்திரம் தீட்டிக் கொண்டிருந்த சிங்காரத்திற்குக் கேட்டது.

அந்த அறை முழுக்கவும் அவன் வண்ணக் கோலங்களாகத் தீட்டிச் சுவரெங்கும் மாட்டியிருந்தான். இப்போது அவன் தன்னைத்தானே ஓர் எண்ணெய் வண்ண ஓவியமாய்த் தீட்டிக் கொண்டிருந்தான். ஏற்கெனவே அவன் தீட்டி வைத்திருந்த மருடேசன் பிள்ளையின் படம் கம்பீரமாய் ஆளுயரத்திற்கு நடுக்கூடத்தில் தொங்கிக் கொண்டிருந்தது. அவன் தன் தாய் அம்பிகை அம்மாளை வரைய முயன்றது இன்று வரை கைகூடாமல் முழுமை பெறாத ஓவியமாய் ஒரு பக்கம் ரொம்ப நாட்களாகச் சாத்திக் கிடக்கிறது. கூடத்தில் மாட்டியிருக்கும் மருடேசன் பிள்ளை உருவப் படத்தைச் சீலையில் வரைந்து எடுத்துக் கொண்டு போய்ப் பொன் வண்ணத்தில் சட்டமடித்துக் கொண்டு வந்து வீட்டில் மாட்டிய போதுதான் கோதையே அதைப் பார்த்தாள்

''எப்படி வரைஞ்சிருக்கான் பாத்தியா, சின்னம்மா?'' என்று கேட்டு, அதை வரைந்தது தானில்லை என்று அவளுக்குத் தெரியாமல் மறைத்துக் கொண்டது எதனால் என்று அவனுக்கே புரியவில்லை.

அவள் அந்தச் சித்திரத்தைப் பார்த்து நமஸ்கரித்தாள், கண் கலங்கி மாலை மாலையாய்க் கண்ணீர் வடித்துக் கொண்டு புருஷனின் நினைவில் உருகிப் போனாள்.

''தம்பி! உன்னையும் இந்த மாதிரி ஒரு படம் வரையச் சொல்லு — அந்த ஆள்கிட்ட'' என்று ஆசையுடன் அவள் தன்னிடமே கேட்டதை ரசித்துச் சிரித்தான் சிங்காரம்.

''அடே. அப்பா! அதுக்கு எவ்வளவு பணம் கேட்கிறான் தெரியுமா அந்த ஆசாரி!'' என்று கற்பனையாக ஒரு சித்திரக்காரனைப் பற்றியும் சின்னம்மாவிடம் பெருமைப் படுத்திச் சொன்னான்:

''சாதாரண ஆளுங்க உருவத்தையெல்லாம் அவன் வரையவே மாட்டான். மகாராஜாக்கள், திவான்கள், வெள்ளைக்கார தொரைங்க, தொரைசானிங்க இவங்க உருவத்தைத்தான் அவன் வரைவான்; அப்பா படத்தை வரையறதுக்காக நான் அவன் கைக்கு ஒரு தங்கக் கங்கணம் போட்டேன்'' என்றெல்லாம் தறிகெட்ட கற்பனைகளை அள்ளி வீசினான். அதையெல்லாம் நம்பி ஏமாந்து வியந்து நின்ற கோதையை மேலும் ஏமாற்றி விளையாட இப்போது, அவள் கேட்டுக் கொண்டபடி தனது உருவத்தையே அவன் வரைந்து கொண்டிருந்தான். எதிரில் நிலைக் கண்ணாடியில் தெரியும் தன் தோற்றத்தைப் பார்த்துக்கொண்டே தூரிகையைத் தண்ணீர்க் கிண்ணத்தில் போட்டான். வரையும்போது பார்க்காத தன் பிம்பத்தை இப்போது நிலைக் கண்ணாடியில் பார்த்தவாறே விரல்களைச் சடக்கு முறித்துக் கொண்டபோது விரல்களிலிருந்த மோதிரக் கற்கள் ஒன்றிலிருந்து வீசிய வெளிச்சம் கண்ணில் பட்டுக் கூசியது.

கண்களை இடுக்கிக்கொண்டு அவன் அறையிலிருந்து வெளியே வந்தபோது நாலு வாசற்கால்கள் தாண்டித் தோட்டத்துக் கிணற்றருகே நின்றிருந்த வெள்ளையம்மாளைப் பார்த்தான். அவளும் ''சிலுக்கு'' என்று சத்தமெழாமல் குரலடங்கிக் கூப்பிட்டுக் கொண்டாள்...

''ஆரது வெள்ளச்சியா? அத்திக்காய் கொண்ணாந்து இருக்கியா?'' என்று குதூகலமாகக் குரலுயர்த்திக் கேட்டுக்கொண்டே வந்தான் சிங்காரம்.

''ஆமாம் கண்ணூ... இன்னைக்கி நல்லதெல்லாம் கொண்ணாந்து இருக்கேன். அங்கே பெரிய வூட்லே ஆய்ஞ்சிக் குடுத்துட்டுப் போடின்னாங்க — காந்திமதியம்மா... தோ, வந்துடறேன் — என் சிலுக்குக் கண்ணுவைப் பார்த்துட்டுன்னு ஓடியாந்திட்டேன்... தே, பாரு பால் சொறா... குட்டிங்க'' என்று கூடையிலிருந்த மீன்களை ஒவ்வொன்றாய் எடுத்துத் துணி துவைக்கும் கல் மீது வைத்தாள் வெள்ளையம்மாள். சிங்காரம் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான் — (தொடரும்)



பையன்: அம்மா பக்கத்துவீட்டு தொட் கான்ஸ்டபிள் மாமா கரைக்காய் கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போனார்.

தாய்: போய்த் திருப்பிக் கொடுத்துவிட்டு வந்துடு.

பையன்: ஏன்?

தாய்: 'ஏட்டு' சுரைக்காய் கறிக்கு உதவாது!

எஸ். சந்திரசேகர்.

# என்ன பெயர் வைக்கலாம்?

சுப்ர பாலன்



நள்ளிரவு கடந்து சிறிது நேரமே ஆகியிருக்கும். மேம்பாலம் ஓய்வாக முதுகை வளைத்துச் சோம்பல் முறித்துக் கொண்டிருக்கிறது.

இப்போதைக்கு அண்ணா மேம்பாலத்தின் அடியில் வாழ்க்கை. யாராவது வந்து துரத்தினால் வேறு இடமா சென்னையில் இல்லை?

சின்னா குழந்தையை அணைத்துப் படுத்துக் கொண்டிருந்தாள். சக்கரப் பெட்டி வண்டியும் இமானுவலின் தொழில் கருவிகளும் தாளாரமாகக் கிடந்தன. சின்னாவின் பூசிய வயிறும், முகப்பொலிவும் அந்த அமைதியான நேரத்தில் அழகாகவே இருந்தன. நாளைக்குச் சர்க்கார் ஆஸ்பத்திரிக்குப் போக வேண்டும். அவளுக்கு இது இரண்டாவது பிரசவம். நாட்கள் ஆக ஆக அவள் மிகவும் சிரமப்படுகிறாள்.

இமானுவல் சிந்தனை வயப்பட்டான். அவனுடைய தொழில் வருமானம் நிலையற்றது. பத்து ரூபாயும் கிடைக்கும், ஒன்றுமே சேராமல் ஒன்று இரண்டோடு நிற்பதும் உண்டு. மூன்று வயதுக் குழந்தைக்குத் துணையாக இன்னொன்று வரப் போகிறது. 'என்ன பெயர் வைக்கலாம்?'

சின்னா தூக்கத்தில் சிரித்தாள்.

இமானுவல் என்னென்னவோ பெயர்களை யோசனை பண்ணினான். முதல் பையன் மாத்யூ... தலைவர் சொல்லி அந்தப் பெயரை வைத்தான்.

''நீ கிறிஸ்து இல்லியா? மாத்யூன்னு பேரு வை.'' என்று சொல்லி ஒரு ஐந்து ரூபாய்த் தாளை அன்பளிப்பாகக் கொடுத்த தலைவரை நினைத்துக் கொண்டான்.

மின்சார ரயிலில் அடிபட்டுக் காலை இழந்து பிழைப்புக்காகச் செருப்புத் தைக்கத் தொடங்கிப் பத்து வருடங்கள் ஆகிவிட்டன. இந்தப் பத்து வருடங்களில் எவ்வளவோ நிகழ்ந்து விட்டன.

தலைவர் எம். எம். ஏ. ஆகி, கொஞ்ச காலம் மந்திரியாகவும் இருந்து, இப்போது வெறுமே இருக்கிறார். ஆனாலும் பழக்கம் மாறாமல், இன்னாசியிடம்தான் தன் காலணியைச் செய்து கொள்கிறார். போன வாரம் அவருடைய காலை வைத்து அளவு எடுத்துக் கொண்டு செய்யத் தொடங்கிய காலணி வேலை முடிந்து விட்டது.

''இன்னாசி! டெல்லி போறேன்... போய்ட்டு வந்து வாங்கிக்கறேன். நிதானமாச் செஞ்சு வை... ரொம்பப் பிரமாதமா இருக்கணும்...''

இன்னாசிக்கு அது ஒரு பெருமை. நடைபாதையில் அமர்ந்து செருப்புத் தைக்கிற இன்னாசியிடம் ஒரு புகழ் பெற்ற தலைவர் வந்து நின்று, செருப்புக்கு அளவு கொடுப்பது அவனைக் கர்வப்படக் கூட வைத்தது.

சின்னா தூக்கம் கலைந்து எழுந்து உட்கார்ந்தாள். ''ஏன்யா? தூக்கம் பிடிக்கலியா?... சொம்மா ஒக்காந்திருக்கே.''

இன்னாசி சிந்தனை கலைந்தது. ''சின்னா! நீ தூங்குப்பா... காலையிலே ஆஸ்பத்திரிக்குப் போவணும்... இப்போ வலி எப்டி இருக்கு?'' அவன் பரிவுடன் கேட்டான்.

எல்லாச் சந்தடிகளும் செத்துப்போன அந்த நேரத்திலும், மேம்பாலத் தாளாரமாய்ச் சின்ன வெளிச்சத்தில் எதையோ பார்த்தபடி குனிந்த தலை நிமிராமல் அமர்ந்திருக்கிறார் அண்ணா.

அருகே உயரமான மேடையில் இரண்டு கால்களையும் மேலே தூக்கித் திமிறிக் கொண்டிருக்கும் குதிரையை அடக்கிப் பிடித்துக் கொண்டிருந்த வீரன் சிலை அழகை அள்ளி வீசிக் கொண்டிருக்கிறது.

பசை வாளியைச் சைக்கிள் காரியரில் கட்டிக் கொண்டு, கட்டுக் கட்டாய்க் காகிதங்களைச் சுமந்தபடி ஒருவன் போகிறான். அவனுக்கு இதுதான் நல்ல நேரம். பத்து மணிக்கும் பதினொரு மணிக்கும் ஊர் அடங்கிய பிறகு ஒட்டினால்தான் போஸ்டர்கள் கொஞ்ச நேரமாவது இருக்கும். அதுவும் சென்னை நகரத்து மேய்ச்சல் மாடுகள் வந்து விட்டால் கேட்கவே வேண்டாம். சினிமா போஸ்டரில் அவ்வளவு சுவை அவற்றுக்கு.

இன்னாசிக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. மொண்ணையான தன் வலது முழங்காலைத் தடவியவாறு எழுந்து உட்கார்ந்து கொண்டான். போஸ்டர் பையனைக் கூப்பிட்டு ஒரு தடி வாங்கிப் பற்ற வைத்துக் கொண்டான்,

இன்னும் இரண்டு மூன்று நாட்களில் தலைவர் வந்து விடுவார். செருப்புக்காக முப்பது ரூபாய் கிடைக்கும். மகராசன் மனசு உற்சாகமாயிருந்தால் கூடவே கிடைக்கும். 'சின்னுவுக்குப் பிள்ளை பிறக்கறதுக்கு முன்னாடியே அவ கேட்ட ஸ்பெஷல் தோசை வாங்கித் தரணும். நல்லதா ஒரு சோளித் துணி வாங்கித் தரணும். சின்னப்பையனுக்கு ஒரு பாசிமாலை வாங்கணும்.'' அவனுடைய திட்டங்கள் விரிவாக இருந்தன.

வரப்போகிற முப்பது ரூபாயில் அவனால் ஐம்பது ரூபாய்க்குத் திட்டமிட முடிந்தது. மறுபடியும் பெயர் நினைவு வந்தது... 'என்ன பெயர் வைப்பது? தலைவரைக் கேட்கலாமா?. போன முறை அவராக வந்தார்... பெயரைச் சொன்னார். இந்த முறை குழந்தையையும் சின்னுவையும் அழைத்துக் கொண்டு தலைவர் வீட்டுக்கே போய்வர வேண்டும்...'

சின்னு மறுபடியும் தூங்கிப் போய் விட்டாள். திடீரென்று சாலையில் பரபரப்பு அதிகமாயிற்று. கார்களும் சைக்கிள்களும் விரைந்தன. ஒன்றும் அதிகமாகி விடவில்லை... மூன்று மணி இருக்கலாம்... பரபரப்புக்கு என்ன காரணம்?

போலீஸ் வண்டிகள் விரைந்தன. ஏதாவது கலவரமாக இருக்குமோ? இன்னாசி குழம்பினான்.

ஏழெட்டுப் பேர் சுண்ணாம்பு வாளியுடன் வருவது தெரிந்தது. தார்ச்சாலையில், அவ்வளவு பரபரப்புக்கு இடையே சுண்ணாம்பால் என்னவோ எழுதிக் கொண்டிருந்தார்கள். அந்தக் கூட்டம் பாலத்துக்கு அடியிலும் வந்தது. அங்கேயும் எழுதினார்கள். இன்னாசியின் நெஞ்சு குலுங்கியது. தலையில் அடித்துக் கொண்டான், அழுதான்.

''தலைவர்... மாரடைப்பால் காலமானார்'' மறுபடியும் கண்களைக் கசக்கிக் கொண்டு படித்துப் பார்த்தான். சந்தேகம் தீராமல் சுண்ணாம்பு வாளி சுமந்தோரைக் கேட்டான்.

''தலைவர், டெல்லியிலேயே செத்துப் பூட்டாரு... பாடி... காலையிலே ஏழுமணிக்கு பிளேன்லே வருது!'' ஒருவன் சொன்னான்.

அரவம் கேட்டுச் சின்னு மறுபடியும் விழித்துக் கொண்டாள். ''சின்னா! தலைவரு போய்ட்டாருப்பா... மகராசன் போய்ட்டாருப்பா...'' பிடிபடாமல் அவன் அழுதான்.




சக்கரவண்டிப் பெட்டியிலிருந்து புதிதாய்ச் செய்து வைத்திருந்த செருப்பைக் கையில் எடுத்து வைத்துக் கொண்டு பார்த்தான். ஆசையுடன் அவன் செய்த அந்தச் செருப்புக்கள் இனி... ''...நிதானமாச் செஞ்சுவை... ரொம்பப் பிரமாதமா இருக்கணும்.'' அந்தக் குரல் கம்பீரமாய்க் கேட்டுக் கொண்டே இருந்தது.

''சின்னு! நீயும் பயலும் இங்கியே பத்திரமா இருந்துக்க... தலைவரைக் கடைசி கடைசியாப் போய்ப் பார்த்துட்டு வாரேன்.''

பித்துப் பிடித்தவன் மாதிரி, சக்கர வண்டியில் ஏறித் தள்ளிக் கொண்டு, சாலையோரமாகச் செல்லும் இன்னாசியின் பரபரப்பை அறியாதவளாய்ச் சின்னு வேதனைப் பட்டாள்.

இன்னும் மூன்று மணி நேரம் கடந்து தான் தலைவரின் உடல் வரும் என்று தெரிந்தும் அவன் முன் கூட்டியே புறப்பட்டு விட்டான்... ஏற்கெனவே, வந்து குழுமியிருந்த அமைச்சர்கள், கட்சிக்காரர்கள், போலீஸ்...





"திருச்சி மாநகரின் மலைக் கோட்டையின் உச்சியில் பிள்ளையார் வீற்றிருக்கிறார் அருகிலுள்ள பொன் மலையில் ஸ்ரீ முத்துகுமார சுவாமி மலை மீது எழுந்தருளி உள்ளார். சற்றுத் தூரத்தில் உள்ள திருவெறும்பூர் மலையில் எறும்பீஸ்வரர் காட்சி கொடுக்கிறார். இவ்வாறு சிவனும் அவர் மைந்தர்களும் அருகருகே மலை மீது இருப்பது அதிசயமான ஒன்று. ஒரு மலை மீது இருந்து பார்த்தால் மற்ற இரு தலங்களும் தெரியும்."

- எஸ். கமலவேணி தனபதி.

இவர்களுக்கு இடையே அவனால் எளிதில் உள்ளே போக முடியவில்லை. வீட்டு வாசலிலேயே ஒதுக்குப்புறமாய் நின்று கொண்டான்... குரோட்டன்ஸ் செடித் தொட்டிகளுக்கு இடையில் பாதுகாப்பாய் அவனுக்கு இடம் கிடைத்து விட்டது...

அங்கே வருகின்ற போகின்ற கார்களின், பிரமுகர்களின் பரபரப்பில் நேரம் மெழுகாய்க் கரைந்து போயிற்று... குறித்த நேரத்தில் அந்தத் தலைவரின் உடல் காரிலிருந்து இறக்கப்பட்டது. கூடவே, தலைவரின் மகளும் மனைவியும் அழுது கொண்டே உள்ளே வந்த காட்சி நெஞ்சைப் பிழிந்தது. இன்னாசி கண்களைத் துடைத்துக் கொண்டான்...

எப்படி உள்ளே போவது... தலைவரைப் பார்ப்பது... என்று அவன் குழம்பியபோது.. தலைவரின் உதவியாளர்கள் இருவர் அவனிடமே வந்தார்கள்.

"இன்னாசி...! நீ மொதல்லே உள்ளே வா... அப்புறம் கூட்டம் ஜாஸ்தியாயிடுச்சுன்னா... ஒன்னெ விடமாட்டாங்க... அம்மாதான் கூப்பிட்டனுப்பிச்சாங்க..."

இன்னாசியின் கண்களில் நீர் மல்கியது. தோட்டத்துச் செடியிலிருந்தே கொஞ்சம் பூக்களைப் பறித்துக் கொண்டான். கைத்தாங்கலாய் இரண்டு பேர் தூக்கிக் கொண்டு போய் அருகே விட்டபோது...

மலர்களை அந்தத் தலைவரின் மேல் தூவி விட்டு... புதிய மிதியடிகளை அவருடைய பாதங்களில் அணிவித்து வணங்கினான்...

மேலே குவிந்திருந்த மலர்மாலைகளைவிட அந்த ஏழையின் கடைசி நேரப் பரிசு எல்லோர் கண்களிலும் நீரைப் பெருக்கியது...

மௌனமாக மீண்டும் வண்டியில் வந்து அமர்ந்து, பாலத்தின் அடியை நோக்கி அவன் வந்த போது, புதிய மழலையின் குரல் அவனை வரவேற்றது... 'பக்கத்துக் குடித்தனக்காரர்' களின் உதவியுடன் குழந்தை பெற்ற பெருமிதத்தில் சின்னு சிரித்தாள்.

குழந்தைக்கு என்ன பெயர் என்கிற பிரச்னை அவனுக்கு இப்போது தீர்ந்து போய் விட்டது. தன் அன்புக்குரிய தலைவரின் பெயரைவிட, வேறு எது பொருத்தமாக இருக்கப் போகிறது?

தகர டப்பியில் தேடிப் பார்த்துக் கிடைத்த சில்லறைகளைத் திரட்டி, சின்னுவின் வயிற்றுப் பாட்டுக்கு வழி தேடினான் இன்னாசி...

## பாகிஸ்தானை ஆண்டவர்கள்




நன்றி : ஹிந்துஸ்தான் டைம்ஸ்

கல்கியில் இடம் பெற்ற ஒரு தலையங்கம் தொடர்பாக

# பெரியார் சிலை: முதல்வர் செய்த முடிவு

"பெரியார் காட்டிய பண்பாடு" என்ற தலையங்கத்தின் இறுதி வரிகளில் சில: பெரியார் காண்பித்த அந்தப் பண்பாட்டினை அவருடைய சீடர்கள் என்று சொல்லிக் கொள்ளும் எல்லாத் தரப்பினரும் கட்சியினரும் கடைப்பிடித்தால் காஞ்சி சங்கர மடத்துக்கு அருகேயே பெரியார் சிலையை வைப்பதா வேண்டாமா என்ற சர்ச்சை அவர்களுக்குள்ளேயே எழாது...

மேற்படி தலையங்கத்தைக் குறிப்பிட்டு, 27.4.79 தேதியிட்ட 'விடுதலை' நாளிதழில், திராவிடக் கழகப் பொதுச் செயலாளர் கி. வீரமணி அவர்கள் எழுதியுள்ளதன் ஒரு பகுதி:

"தியாகராய நகரில் சிவ விஷ்ணு ஆலயத்தில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் பேசிய 'அர்த்தமுள்ள இந்து மத'ப் பிரசாரகர் ஒருவர் தமக்குத் தற்போதைய முதலமைச்சரிடம் உள்ள செல்வாக்கு எவ்வளவு என்பதைக் காட்டும் வகையில் காஞ்சி ஆச்சாரியார் ஜயேந்திர சரஸ்வதி சாமிகள் தம்முடன் டெலிபோனில் தொடர்பு கொண்டு சங்கர மடம் அருகில் சிலை வைப்பதாக இருப்பதை முதல்வரிடம் சொல்லித் தடுத்திடச் சொன்னதாகவும், அதற்கேற்பத் தாம் உடனே தொடர்பு கொண்டு அதை நிறுத்தி விட்டதாகவும் கூறியதுதான், விவகாரம் ஆரம்பமாவதற்கு முதற் காரணம்."

இது சம்பந்தமாக திரு கண்ணதாசனைச் சந்தித்த போது அவர் கூறினார்:

"ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் என்னுடன் ஒருமுறை டெலிபோனில் தொடர்பு கொண்டது உண்மைதான். ஆனால் அது சங்கர மடம் அருகில் பெரியார் சிலை வைப்பதைத் தடுப்பதற்காக என்பது தவறு. சில மாதங்கள் முன்பு கயையில் உலக இந்துக்கள் மகாநாடு நடைபெற்றது. அச்சமயத்தில் அது சம்பந்தமாகத்தான்



ஸ்ரீ சங்கராச் சாரியார் அவர்கள் என்னுடன் டெலிபோனில் பேசினார்.

"நான் கொஞ்ச நாள் முன்பு காஞ்சிக்குச் சென்றிருந்த போது அங்குள்ள அற நிலைய ஸ்தாபனத்தைச் சார்ந்தவர்களும், நிறைய ஆஸ்திக நண்பர்களும், என்னைச் சந்தித்து சங்கர மடம் அருகில் பெரியாரின் சிலை வைப்பதைத் தவிர்த்து விட ஆவன செய்யக் கோரி முதல்வர் திரு எம். ஜி. ஆர். அவர்களிடம் எடுத்துச் சொல்லும்படி என்னைக் கேட்டுக் கொண்டனர். அவர்களது உணர்வுகளுக்கு மதிப்புக் கொடுக்கும் வகையில் இது சம்பந்தமாகப் பேச முதல்வரை நாடி நான் போன சமயத்தில் முதல்வர் எம். ஜி. ஆர். அவர்களே சில தினங்கள் முன்பாக சங்கர மடம் அருகில் பெரியார் சிலை சம்பந்தப்பட்ட விஷயத்தில் அரசு சார்பான முடிவை எடுத்து விட்டிருந்தது எனக்குத் தெரிய வந்தது. இதைத்தான் நான் சிவ விஷ்ணு ஆலயத்தில் பேசும்போது குறிப்பிட்டேன்."

**பேட்டி : ஜயகன்**

# கனவா - நிஜமா? 21

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்

ஆயுதம் தயாரிக்கும் சித்திரஹாஸன், தன் அடிமையான மாயாபுரி மன்னர் வஜ்ரபாகுவுடன் கொள்ளைப்பொருள் நிரம்பிய வண்டியை ஓட்டியபடி திரும்பிக் கொண்டிருந்தான்.




இதே வேளையில் மாயாபுரியின் தலைநகரில் அநாமதேயர் வேங்கைமார்பனிடமும் ரண மல்லனிடமும் பேசிக்கொண்டிருந்தார்.

வேங்கைமார்பரே! நாட்டின் பாதுகாப்புக்கும் அதன் நல்வாழ்வுக்கும் பொறுப்பான— உங்கள் தலைமுறையால் புகழ் பெற்ற பிரதம சேனாபதி தர்மவர்த்தன் இப்போது எங்கே இருக்கிறான் தெரியுமா? நீண்ட நாட்களாக அவனை யாரும் பார்க்கவில்லை. ஏன், எங்கே போனான்?



மக்கள் சபையின் அங்கத்தினர்கள் பலரைத் தன் கைக்குள் போட்டுக் கொண்டான். அதில் முக்கிய புள்ளிகளான சண்டனிடமும் முண்டனிடமும் நாட்டைத் திவாலாக்கும் பொறுப்பை ஒப்படைத்தான். அந்நியனுக்கு இந்த நாட்டை அடகு வைக்கவும் திட்டம் தீட்டித் தலைமறைவாகிப் போனான். இந்தச் சதிகாரர்களிடமிருந்து மாயாபுரியைக் காக்கத்தான், அவர்கள் திட்டங்களைத் தெரிந்து கொள்ளத்தான்— முட்டாளைப் போல நாடகமாடினேன்...



இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போது ஒரு வீரன் ஓடோடி வந்து மன்னர் அநாமதேயரின் முன் மண்டியிட்டுச் சரிகிறான்.




ஆலோசனை மண்டபத்தில் அதிர்ச்சியும் ஆத்திரமும் மிக்க குரல்கள் ஒலித்தன.






# 3 மாதம் ஆனபின், பால் மட்டும் போதாது





## டாக்டர்கள் சிபாரிசு செய்வது

# ஃபாரெக்ஸ்®

## உங்கள் குழந்தைக்கு உன்னதமான திட உணவு

**டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்யக் காரணம்?**
திட உணவு தொடங்கும் காலத்தில் உங்கள் பாப்பாவின் தேவைகளுக்கு நிறைவு தரும்படி சரிவிகிதமாகச் சத்துக்கள் நிரவியது ஃபாரெக்ஸ்; பச்சிளம் ஜீரண சக்திக்கு ஏற்றது.

**ஃபாரெக்ஸ், பாப்பாவின் தேவைகளுக்கு நிறைவு தரும் சத்துணவாக விளங்கக் காரணம்?**
இது வழங்கும் சத்துக்கள்: மூளை வளர்ச்சிக்கும் உடல் வளர்ச்சிக்கும் தக்க அளவில், ஜீரணிக்க லகுவான புரதச் சத்து; சக்திக்கான கார்போ-ஹைட்ரேட்; பற்களுக்கும் எலும்புகளுக்கும் வலுவூட்டப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின் D அதிமுக்கியமாக, இரத்தத்தை நலமுடன் வைத்திருக்க உகந்த அளவு இரும்புச் சத்து.

**எதற்காக 3ஆம் மாத முதல்?**
உணவை உங்கள் பாப்பா தக்கபடி மென்று தின்னப் பழக வேண்டும்; விழுங்கினாலோ, வயிற்று வலி வரலாம், வளர்ச்சி பாதிக்கப்படலாம்.

3 மாதக் குழந்தையின் ஜீரண சக்தி இன்னமும் இளம் பிஞ்சுதான். எனவே, சம்பிரதாய உணவுகளை விட மேலாக அவனுக்குத் தேவை: தனிப்படத் தயாரிக்கப்பட்ட திட உணவு--எளிதில் செரிக்கத்தக்க குழந்தையுணவு.

**'வயதேறிய' உணவுகளைத் துவக்குவது எப்போது?**
பாப்பா முதலடி வைத்து நடக்கும்போது, 'வயதேறிய' உணவுகளை வரவேற்பான். சிறிது கற்பனையும் அளவிலா அன்பும் இழைய, எல்லா உணவுகளிலும் கலந்து கொடுங்கள் ஃபாரெக்ஸ்.

இப்போது, 400 கிராம் டின்னிலேயும் வருகுது அதே ஃபாரெக்ஸ் நல்லமுது.




## விரைவான முழு வளர்ச்சிபெற பாப்பாவுக்கான உன்னதமான திட உணவு

லின்டாஸ்-GLF-64-2014 TM

அருள்வாக்கு

# "ஆசாரியாள்" தனிப் பெருமை

ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராசாரிய சுவாமிகள்

"ஒருவர் மற்றவர்களுக்கு உபதேசிக்கிற விஷயங்களைத் தாமே முழுதும் சந்தேகமில்லாமல் தெரிந்து கொண்டிருக்க வேண்டும். புத்தியால் தெரிந்து கொண்டிருப்பது மட்டுமில்லாமல் அதைத் தாமே நடத்திக் காட்ட வேண்டும். இப்படி *Personal Example* ஆல் (தமது சொந்த முன்னுதாரணத்தால்) பிறரையும் தம் உபதேசப்படி நடக்க வைக்கிறவர்தான் ஆசாரியர்" — என்று 'ஆசார்ய' பதத்தை விஸ்தாரம் பண்ணி அர்த்தம் சொல்லியிருக்கிறது. 'ப்ரொஃபஸர்' என்பதைப் பற்றி வேடிக்கையாக ஒரு அர்த்தம் சொல்லுவதுண்டு. 'ப்ரொஃபெஸ்' பண்ணுவது என்றால் விஷயம் தனக்கு நன்றாகத் தெரியும் என்று வெளியில் பிரகடனப்படுத்திக் கொள்வதுதான்; வாஸ்தவமாகவே பூர்ணமாகத் தெரிந்திருக்க வேண்டுமென்பதில்லை. இதை வைத்து வேடிக்கை பண்ணுவார்கள். ஆனால் ஆசார்யர் என்பவர் விஷயத்தை நன்றாகத் தெரிந்து கொண்டவர் மட்டுமில்லை; பரிபூரணமாக அநுஷ்டித்தும் காட்டுபவர். அவருடைய அநுஷ்டான சக்தியேதான் அவர் சொல்கிற தர்மங்களையும் தத்துவங்களையும் பிரகடனப் படுத்துமே தவிர, அவராக வாயைத் திறந்து 'நான் இதையெல்லாம் தெரிந்து கொண்டவன்' என்று பிரகடனம் பண்ணிக் கொள்ள மாட்டார்.

இப்படியாகத் தாங்கள் கற்றுக் கொடுக்கிற விஷயத்தில் தாங்களே அநுபவபூர்வமாகத் தேர்ச்சி பெற்றிருக்கிற ஆசார்யர்கள் பலர் இருந்திருக்கிறார்கள். மதாசாரியர்கள் மட்டுமில்லாமல், மற்றத் துறைகளிலும் சொந்தமாகத் தேர்ச்சி பெற்றுப் பிறகு கற்றுக் கொடுக்கிற வித்யாசார்யர்கள் இருந்திருக்கிறார்கள். தநுர்வேதத்தைக் கரை கண்டு மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுத்தவர்களை த்ரோணாசார்யார், க்ருபாசார்யார், பீஷ்மாச்சாரியார் என்றெல்லாம் 'ஆசார்ய' பட்டம் போட்டுச் சொல்கிறோம் அல்லவா?

ஆனாலும் இப்படி முன்னாலே ஒருத்தருடைய பேரைச் சேர்க்காமல், வெறுமனே 'ஆசார்யாள்' என்றே சொல்லப் படுகிற சிறப்பு ஒருத்தருக்கு இருக்கிறது என்றால் அது நம் பகவத்பாத ஸ்ரீ சங்கராசார்யாளுக்குத் தான்! 'ஆசார்யர்கள்' என்று பன்மையில் மரியாதையாகச் சொல்வது பேச்சு வழக்கில் 'ஆசார்யாள்' என்றாகிறது — 'பெரியவர்கள்' என்பது 'பெரியவாள்' என்றாகிற மாதிரி; 'பிரம்மேந்திரர்கள்' என்பதை 'பிரம்மேந்திரான்' என்கிறோமல்லவா? 'பகவத்பாதர்கள்' என்பதை 'பகவத்பாதாள்' என்கிறோம்.

அத்வைத வித்யையின் மூல புருஷர்களாக ஸ்ரீ பகவத்பாதாளுக்கு முந்தியே வியாஸர், சுகர், கௌடபாதர், கோவிந்த பகவத் பாதர் ஆகியோர் இருந்திருக்கிறார்கள். இவர்கள் பேருக்கும் 'ஆசார்யாள்' என்று சேர்ப்பதுண்டு — வியாஸாசார்யாள், சுகாசார்யாள் என்று. ஆனால் இப்படிப்பட்ட பிரம்ம வித்யா குருக்கள் எல்லோர் பேரையும் நாராயணனிலிருந்து ஆரம்பித்துச் சொல்கிற "நாராயணம் பத்மபுவம் வஸிஷ்டம்" என்ற குருவந்தன ச்லோகத்தில் பகவத்பாதாள் ஒருவரைத் தான் 'ஸ்ரீசங்கராசார்யம்' என்று ஆசார்ய பதம் கொடுத்துச் சொல்லியிருக்கிறது!

வைஷ்ணவர்கள் ஸ்ரீ ராமாநுஜரையே ஆசார்யர் என்பது வாஸ்தவம். ஆனால் அவர்களில் மற்றவர்களும் பேருக்குப் பின்னால் 'ஆசார்ய' என்று போட்டுக் கொள்ளுகிறார்கள். ராஜகோபாலாசாரியார் என்கிறோம்; ராமகிருஷ்ண ஹோமில் ஸி. ராமாநுஜாசாரியார் என்பதாக அந்த ஸம்பிரதாயத்தின் முக்கிய ஆசார்யர் பேரிலேயே ஒருத்தர் இருந்திருக்கிறார்! வைஷ்ணவர்கள் ஐயங்கார் அல்லது ஆசார்யார் என்று போட்டுக் கொள்கிற மாதிரியே, மாத்வர்களும் ராவ் போட்டுக் கொள்ளாவிட்டால் 'ஆச்சார்' போட்டுக் கொள்கிறார்கள். லக்ஷ்மணாச்சார், வாஸுதேவாச்சார் என்றெல்லாம் சொல்கிறோ

மல்லவா? ஆச்சார் என்பதும் 'ஆசார்ய' தான். தமிழ் நாட்டில்தான் ''ராவ்'' என்றால் மாத்வரேயன்றி, மாத்வர்கள் அதிக மூள்ள கன்னட தேசத்தில் (ஆந்திராவில் கூட) அத்வைதிகளான ஸ்மார்த்தர்கள்தான் அதிகமாக ''ராவ்'' என்று போட்டுக்கொள் கிறவர்கள். தமிழ் நாட்டிலேயே கோய முத்தூர், வடார்க்காடு ஜில்லாக்களில் ''ராவ்'' போட்டுக்கொள்ளும் ஐயர்கள் உண்டு. ஆனால் ''ஆச்சார்'' என்று போட் டுக்கொள்பவர்களில் அத்வைதிகள் இடை யவே கிடையாது; அவர்கள் அத்தனை பேரும் மாத்வர்கள்தான்.

நம் (சங்கர) ஆசார்யாளை அநுஸரிக்கிற ஸ்மார்த்தர்களில் தான் அவர் ஒருவரைத் தவிர யாரும் 'ஆசார்ய' என்று பேருக்குப் பின்னால் போட்டுக் கொள்வதில்லை. நம்மில் சங்கரப் பெயருள்ள ஒருத்தர் இருந்தால் அவர் சங்கரையராகவோ, சங்கர சாஸ்திரிக ளாகவோ, சங்கர தீக்ஷிதராகவோ சங்கர சர்மாவாகவோ தான் இருக்க முடியுமே தவிர — 'சங்கராசாரியார்' என்றால் நான் தான்; மற்ற சங்கர மடத்து ஆசாரியர்கள் தான். ஆதி சங்கர பகவத்பாதாள் ஒருத்த ருக்குத்தான் நம் ஸம்பிரதாயத்தில் 'ஆசார்ய' பட்டம்! அதையே பரம கருணையால் தம் பீடங்களில் வருகிறவர்களுக்கும் கொடுத்து விட்டார். அவருடைய நாம தாரண மாத்தி ரத்தால்தான் எனக்கு நடக்கிற இத்தனை மரி யாதையும்!

---

# ஜோக்கு வரும் ஜோக்குகள்!

லிபியா நாட்டு ட்ரிபோலி விமான நிலையம். எல்லாப் பிரயாணிகளையும் போலவே ஓர் இளைஞருடைய பெட்டி, படுக்கைகளைச் சோதனை போட்டார்கள் சுங்க அதிகாரிகள். சோதனை முடிந்த தும் அந்த இளைஞர் தம் பெட்டிகளைத் தூக்கிக் கொண்டு வெளியே நின்றி ருந்த தம் காருக்குச் சென்றார்.

அந்த இளைஞர் யார் என்பதை அறிந்த நான் ஆச்சரியப் பட்டேன். அவர் லிபியா நாட்டின் மின்துறை அமைச்சர்!

நம் அமைச்சர்களைப் பற்றியும் நினைத்து கொண்டேன்.

மிர்ரரில் கே.ஏ. அப்பாஸ். —ராமு.

★

சாப்பிட வந்தவர்: ஏம்பா சர்வர்! உனக்கு ஞாபக மறதி அதிகமோ? தோசைக்குச்சாம்பார் கேட்டு எவ்வளவு நேரமாச்சு? நீ கொண்டு வருவதற் குள் ஒரு வாளி தண்ணியையே குடிச் சிட்டேன்!

சர்வர்: உங்களுக்குத்தான் ஞாபக மறதி அதிகம்! நீங்க கேட்டது தோசைக்குச் சாம்பார் இல்லே. குடிக் கத் தண்ணீர். நீங்க குடிச்சது தண்ணி இல்லே சாம்பார்!

கன்னியப்பன்.

★

தந்தை: ஏண்டா உன்னை ஒருத் தன் ஒரு மாதத்துக்கு முன்னால காண்டா மிருகம்னு சொன்னதுக்கு இப்ப ஏன் அழறே...?

பிள்ளை: நான் நேத்துதானே காண்டா மிருகத்தையே பார்த்தேன்.

வி. ராம்ஜீ.

★

''அவனோட குடும்பம் ரொம்பவும் திட்டமிட்ட குடும்பம், மூன்றே மனை விகள். ஒவ்வொரு மனைவிக்கும் மூன்றே குழந்தைகள்.''

• ஆர். எல். நாராயணன்.

★

''எங்க வீடு ரொம்ப வசதியாசத்தான் இருக்கு. ஆனா வீட்டுக்காரர்தான் வாட கையை ரொம்ப ஓவரா கேட்கிறார்.''

''அப்படியா?''

''ஆமாம் போன வாரம் மட்டும் பத்து தடவையாவது வந்து கேட்டார்னு பார்த்துக்கோ.'' வி. ராம்ஜீ.

★

''எனக்கு எட்டு தங்கை இருக்கா... அவங்களுக்கு அஷ்ட லக்ஷ்மியோட பேர்களையும் வைத்தாச்சு...''

''மறுபடியும் உங்க அப்பாக்குப் பொண் பிறந்தா?...?''

''ஜோதி லட்சுமின்னு பேர் வைப் போம்!''

''என்னது, காலையில் பல் துலக்காம சோபாவில் உட்கார்ந்துண்டு காப்பி குடிக்கறே?...''

''இதுதான் சோபா — கம் — பெட் காப்பி!''

''பதி பத்னி ஔர் வோ'' என்ற நாடகத்திலிருந்து —எஸ். பிரகாஷ்



# குடத்து விளக்குப் பாடுகிறது

கண்ணதாசன்

நற்குடிப் பிறத்தல் வேண்டும்
நல்லவை நினைத்தல் வேண்டும்
பொற்குவை நினையா னாகப்
பொருளையும் துறத்தல் வேண்டும்
தற்பெரும் புகழைப் பேசி
தலைதருக் காமை வேண்டும்
இப்பெரும் மனிதன் தானே
இயற்கையில் கவிஞன் ஆவான்!

கற்பனை வளர்தல் வேண்டும்
கவிநயம் பிறப்பில் வேண்டும்
சொற்பொருள் அறிவும் வேண்டும்
சுவைபட உரைத்தல் வேண்டும்
பற்பல கருத்தும் கூறும்
பான்மையை வளர்த்தல் வேண்டும்
இப்பெரும் மனிதன் தானே
இயற்கையில் கவிஞன் ஆவான்!

ஆண்மையும் அறமும் வேண்டும்
அஞ்சுவ தஞ்சல் வேண்டும்
கேண்மையும் உறவும் கண்டால்
கிளர்ச்சிகொள் மனமும் வேண்டும்
வாளெடும் போரில் நல்ல
வலிமையைக் காட்டல் வேண்டும்
தூணென நிற்கும் இந்தத்
தூயனே வீரன் ஆவான்!

அவையினை அறிதல் வேண்டும்
அடக்கமும் பணிவும் வேண்டும்
இவையிவை மொழிதல் ஒன்றே
இயற்கையென் றறிதல் வேண்டும்

சுவையுள வார்த்தை கேட்டு
அவையினர் சொக்கல் வேண்டும்
எவனிவை படைக்கின் றானோ
இயற்கையில் அறிஞன் ஆவான்!

குலங்கெடு பிறப்பு நாசம்
குணக்கேடு தீய சொற்கள்
நலங்கெடு மனத்தின் போக்கு
நன்றியில் லாத வாக்கு
இலங்குமோர் தெளிவில் லாமை
எவரையும் எறிந்து பேசல்
துலங்குவான் இவர்க ளோடும்
தொடர்புள மனிதனென்று!

நான் கண்ட தலைவர் பல்லோர்
நல்லுயர் கவிஞர் பல்லோர்
வான்கொண்ட புகழைப் பெற்று
வாழ்ந்திட்ட அறிஞர் பல்லோர்
மான்கொண்ட கண்ணை வாளாய்
மதிக்கின்ற வீரர் பல்லோர்
ஏன்கண்டேன் இந்த நாட்டார்
இவர்களை மதித்தா ரில்லை!

நெருப்பினை 'நிலவே' என்பார்
நீசனைத் 'தலைவா' என்பார்
கருப்பினை 'வெண்மை' என்பார்
கழுதையை 'யானை' என்பார்
உருப்படா தவனை யெல்லாம்
உயரத்தில் ஏற்றி வைப்பார்
செருப்பையே மதிக்கும் இந்தத்
தேசத்தில் பிறந்தேன் பாவி!



# கல்கத்தா சிப்ஸ்

கமல்

(கல்கத்தாவில் கண்டதும் கேட்டதும்)

✠ பஸ், டிராம் கட்டணங்கள் கல்கத்தாவில் ரொம்ப சீப். 20 பைசாவுக்கு எவ்வளவு தூரம் போக முடிகிறது! 24ம் நம்பர் டிராமில் டல்ஹவுஸியில் ஏறினால் ராஷ்பிஹாரி அவென்யூ போக ஒரு மணி பத்து நிமிஷம் ஆகிறது. டிக்கட்: 20 பைசாதான்.



✠ சௌத் பாயிண்ட் ஸ்கூல் என்பது ஒரு சின்னக் கிராமம் மாதிரியாம். சுமார் எட்டாயிரம் மாணவர்கள் படிக்கிறார்கள். ஒன்பதாவது வகுப்பில் மட்டும் 20 செக்ஷன் இருக்கிறது. செக்ஷனுக்கு 50 மாணவர்களுக்கு மேல். ஆசியாவின் மிகப் பெரிய பள்ளிக்கூடம் இது.

✠ மின்சாரத் தட்டுப்பாடு மிகவும் அதிகம். போனால் வர மணிக் கணக்கில் ஆகிறது. தினமும் லோட் - ஷெட்டிங் உண்டு. "என் வீட்டுப் பகுதியிலும் 'லோட் - ஷெட்டிங்' செய்யலாம்" என்று முதல்வர் ஜோதி பாசு சொல்லி விட்டாராம்.

✠ ஆசாரிய பாராஃபுல்லா ரோடில் உள்ள ஒரு மருந்துக் கடையின் பெயர்: Life (உயிர்!)

✠ பெரிய கறுப்பு போர்டில் நடுவில் வெள்ளைக் கட்டம் போட்டு விட்டுக் கீழே எழுதியிருக்கிறார்கள்: கல்கத்தாவைச் சுத்தமாக வைத்திருங்கள்!

✠ ஹரிகேன் விளக்குதான் ஜீவநாடி. ஒரு விளக்கு சிம்னியில் பொறிக்கப்பட்டிருந்தது:

SUN BRAND
NOT
MADE IN GERMANY !

✠ ரவீந்திர சரோவரில் உள்ள ஒரு அறிவிப்பு: டேபிள் டென்னிஸ் Co Aching. வார்த்தையைப் பிரித்து எழுதியிருப்பதால் 'கோச்சிங்' என்பது 'கோ-ஏக்கிங்' (கூடவே வலிக்கச் செய்வது) ஆகி விட்டது.

✠ பொறி இயல் தொழிற்சாலை ஒன்று எஃகு Die பண்ணுகிறது. அந்த நிறுவனத்தின் பெயர்: Kamala Dies.

✠ அயல் நாட்டு இசை ரிகார்டுகளை தெரு ஓரக் கடைகளில் நிறைய விற்கிறார்கள், பழைய புத்தகங்கள் மாதிரி. விலை புது ரிகார்டுகளை விட அதிகம். தட்டுக்களின் உறைகளில் உள்ள படங்கள் படு கவர்ச்சியாக உள்ளன.



✠ படு சிக்கலான சந்தில் இருக்கும் 'சலவைக் கல் அரண்மனை'யைப் பலர் பார்த்திருக்க மாட்டார்கள். சுமார் 100 வருஷத்திற்கு முன்பு ஒரு அரசர் (ராஜா ராஜேந்திர மல்லிக் பகதூர்) கட்டிய இந்த மாளிகையில் நூற்றுக் கணக்கான சலவைக்கல் சிற்பங்கள் உள்ளன - அபாரம், அற்புதம், பிரமாதம் என்று வியப்பை ஏற்படுத்துகின்றன. விருந்து அறை, நடன அறை, தர்பார் ஹால் எல்லாம் செல்வச் செழிப்பையும் மன்னரின் கலை உணர்வையும் காட்டுகின்றன. தரை, சுவர், எல்லாம் இத்தாலிய வண்ணவண்ண சலவைக் கற்கள். சுமார் 20 அடி உயர விக்டோரியா மகாராணியின் மரச்சிற்பம் (ஒரே மரமாம்!) என்ன கம்பீரமாக இருக்கிறது: அறுபதடிக்கு இருபதடி உள்ள ரத்தினக் கம்பளம் (ஒட்டுக்கள் இல்லாமல் நெய்யப்பட்டது). பிரம்மாண்ட நிலைக் கண்ணாடிகள், நளினமான சிற்பங்கள் எல்லாமே நம் புருவத்தை உயர்த்துகின்றன.



✠ இங்கு பல பெரிய கிளிகள் உள்ளன. என்ன வண்ணம்! என்ன அழகு! அருகிலேயே இரண்டு வெள்ளைக் காக்கைகளும் உள்ளன. அந்தச் சூழ்நிலையில் அவைகளும் அழகாகத்தான் இருக்கின்றன.

✠ பஸ்களில் பம்பரில் பயணம் செய்வதைத் தடுக்க நிறைய கூரான ஆணிகளை வைத்திருக்கிறார்கள். ஆனால் அவைகள் யாவும் மடக்கப்பட்டு இருக்கின்றன!



✠ ஒருவர் சிவப்புக் கொடி பிடித்து நிற்க, மூன்றுபேர் கேட்டுக் கொண்டிருக்க ஒரு தொழிற்சங்கவாதி ஆக்ரோஷமாகச் சொற்பொழிவு நடத்திக் கொண்டிருந்தார், ஒரு சின்னக் கடைக்கு முன்பு. நாலு லட்சம் பேர்களுக்கு முன்பு பேசுவது போல் உணர்ச்சியுடன் பேசிக் கொண்டிருந்தார்!

✠ ஃப்ரீ ஸ்கூல் ஸ்ட்ரீட்டில் கண்ணில் பட்ட போஸ்டர்கள்: ரௌடிகளை ஒழிப்போம் - விபசார எதிர்ப்புக் கமிட்டி!

✠ பகல் மூன்றரை மணிக்கு எஸ்பிளனேடில் நடு ரோடில் அரசியல் பொதுக் கூட்டம் நடந்து கொண்டிருந்தது ஒருநாள். நல்ல கூட்டம்தான்!

✠ கை ரிக்ஷாக்கள் நிறைய இருக்கின்றன. அவை நம் கண்களையும் மனத்தையும் உறுத்துகின்றன!

இந்தியாவில், 1973–75 ஆண்டுகளில் அமெரிக்க நாட்டின் தூதராகப் பணியாற்றிய டேனியல் பாட்ரிக் மொய்னிஹன் ''ஒரு ஆபத்தான இடம்'' (A Dangerous Place) என்றொரு புத்தகம் தமது வாழ்க்கை அனுபவங்களை வைத்து எழுதியிருக்கிறார். அதில் இந்தியாவில் கம்யூனிஸ்ட் செல்வாக்கை ஒழிக்க, இருமுறை அமெரிக்கப் பணத்தை இந்திய காங்கிரஸ் கேட்டுப் பெற்றுள்ளது. ஒரு முறை இப்பணம் ஸ்ரீமதி இந்திரா காந்தி காங்கிரஸ் கட்சியின் முக்கிய உறுப்பினராக இருந்தபோது அவரிடமே கொடுக்கப்பட்டது என்று குறிப்பிட்டுள்ளார். இச்செய்தி அப்புத்தகத்தில் மூன்று நான்கு வரிகளிலேயே முடிந்து விடுகிறது. ஆயினும் இவ்விஷயம் பாரத நாட்டில் பெரும் புயல் — சர்ச்சையைக் கிளப்பி விட்டுள்ளது. அப்புத்தகத்தில் இன்னும் இந்தியாவைப் பற்றி என்ன என்ன வந்துள்ளனவோ என்ற ஆவலையும் பாரத மக்களிடம் தூண்டி விட்டுள்ளது.

பாரதம் சுதந்திரம் அடைந்த புதிதில் அமெரிக்காவில் அதன் செல்வாக்கு அபரிமிதமாக இருந்தது என்கிறார் மொய்னிஹன். இந்தியாவுக்குச் சென்று விட்டு வந்தவன்



# “நான் பொய்னிஹன் அல்ல!”

என்றாலே போதும், அந்த மனிதன் எந்த அமெரிக்க சர்வகலாசாலையிலும் மிக கௌரவமாக நடத்தப்படுவான். ''அமெரிக்கா இந்தியாவைப் போல் ஆகப் போகிறது. இந்தியா அமெரிக்காவைப் போல் ஆகப் போகிறது'' என்று அமெரிக்க மக்கள் குதூகலத்துடன் இருந்தனர்.

இது எப்படி நாளடைவில் வெறும் கனவாய், பெரும் ஏமாற்றமாக முடிந்தது என்பதை விளக்குகிறார் மொய்னிஹன்.

பாரதம் 1960ம் ஆண்டுகளில் பலகாலம் உணவுப் பற்றாக்குறையின் காரணமாகப் பஞ்சத்தில் அவதியுற்றது. அப்பொழுது 'பி. எல். 480' என்ற திட்டத்தின் கீழ் நீண்ட காலக் கடன் முறையில் ஏராளமாகக் கோதுமை அமெரிக்கா இந்தியாவுக்கு உதவியது. இப்படிப் பல ஆண்டுகள் உதவியதில், இந்தியா, அமெரிக்காவுக்குத் திரும்பித் தர வேண்டிய தொகை பல கோடி ரூபாய் ஆகி விட்டது. இந்தக் கடன் இன்றைய பாரத மக்களின் கொள்ளுப் பேரன்கள் காலத்திலும் கொடுத்துத் தீர்க்க முடியாத அளவுக்குப் பெருகி விட்டது. ஆனால் அமெரிக்கா அந்தக் கடன் தீர்க்கவும், பாரதநாட்டுத் தொழில் நுட்ப வளர்ச்சி பெருகவும் உதவும் வகையில் ஒரு யோசனை கூறியது. அக்கடனை ஒரு கல்வி நிதியாக மாற்றி அமெரிக்கர் ஒருவரின் தலைமையில் பாரத நாட்டில் கல்விப் பணிக்குச் செலவிடுவது என்று தீர்மானிக்கப் பட்டது. இதற்கு முதலில் இந்திய அரசாங்கமும் இணங்கி விட்டுப் பின்னர் கைவிட்டது. அது மட்டுமல்ல.

அமெரிக்கா தனது உபரி தானிய விளைச்சலைக் கடலில் கொட்டுவதற்குப் பதில் இந்தியாவில் கொட்டியதே தவிர வேறில்லை. அமெரிக்காவில் உபரி விளைச்சலினால் தானிய விலைகள் சரிந்து, அமெரிக்க விவசாயப் பெருங்குடி மக்களுக்கு நஷ்டம் ஏற்படுவதைத் தடுக்க, இந்தியாவுக்கு அனுப்பி வைத்தது. இந்திய விவசாயிகள் நூதன விவசாய முறைகளைக் கையாண்டு உற்பத்தியைப் பெருக்குவதைத் தடுக்கவே அமெரிக்கா உணவு தானிய உதவி நல்கியது என்றெல்லாம் குற்றம் சாட்டப்பட்டது எனக் கூறுகிறார் மொய்னிஹன்.

இந்திய மக்கள் பஞ்சத்தில் அவதிப்பட்ட போது, அமெரிக்கா நெஞ்சுருகி உதவப் போய் இவ்வாறு அவமானப்பட்டது என்கிறார் மொய்னிஹன்.

•

1962ல், இந்தியாவின் மீது சீனா படையெடுத்த போது, இந்தியா கெஞ்சிக் கேட்டுக் கொண்டதின் பேரில் சீனத் துருப்புகளுடன் சண்டை போட அமெரிக்கா கிட்டத்தட்ட தன் படைகளையே அனுப்பி விட்டது என்று கூறுகிறார். அந்த அளவுக்கு அமெரிக்க ராணுவ

உதவி வந்தது. ஆயினும் என்ன? பாரத நாட்டின் கூட்டுச் சேராக் கொள்கை நடைமுறையில், மேற்கத்திய நாடுகளுக்கு எதிராக இந்தியா சோவியத் ரஷ்யாவுடன் கூட்டுச் சேருவது என்பதாகத்தான் இருந்தது. இது தெளிவான பிறகும் அமெரிக்க வெளி விவகார மந்திரி டாக்டர் கிஸ்ஸிங்கர் அமெரிக்கா, கூட்டு சேராக் கொள்கையை ஒப்புக் கொள்வதாகக் கூறியதை மொய்னிஹன் கண்டிக்கிறார்.

இந்திரா காந்தியின் பொருளாதாரக் கொள்கை இந்தியாவை ஆபத்தில் கொண்டு விடும் என்றும், அம்மையார், தமக்கு ஏற்பட்டு வரும் எதிர்ப்பை நசுக்கும் முறை காரணமாக விரைவில் பாரத நாட்டில் ஜனநாயகமே அடியோடு அழிக்கப்பட்டு விடும் என்றும் தாம் கருதித் தமது நாட்டுக்கும் எச்சரிக்கை செய்ததாக மொய்னிஹன் கூறுகிறார்.

சீனாவின் ராக்கெட் பயிற்சிகளையும், அணுகுண்டு சோதனைகளையும் வேவு பார்க்கப் பொருதி இயல் நுட்பக் கருவிகள் 26,645 அடி உயரமுள்ள நந்தா தேவி மலையுச்சியில் பதிக்கும் முயற்சியில் இரண்டு நாடுகளும் ஒத்துழைத்தன. ஆனால் நந்தா தேவி மலையில் புயலடித்த வேகத்தில் அந்தக் கருவிகளைப் பதிக்க முடியாமல் மலை ஏறிச் சென்றவர்கள் திரும்பி விட்டனர். கருவிகள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு விட்டன. பின்னர் அவை நந்தா தேவி மலைக்கு ஒட்டினாற் போலுள்ள 'நந்த கோட்' மலையில் 22,400 அடி உயரத்தில் அடுத்த ஆண்டு பதிக்கப் பட்டன.

இப்படி அமெரிக்க உதவியுடன் உளவு வேலைகள் செய்து கொண்டே அன்று பிரதமராக இருந்த ஸ்ரீமதி இந்திரா காந்தி அமெரிக்காவின் உளவாளிகள் ('ஸி. ஐ. ஏ') இங்கு இருக்கிறார்கள் என்று அமெரிக்காவைத்தாக்கியும் வந்ததை மொய்னிஹன் நினைவு கூர்ந்து, இந்திராவின் இரட்டை வேடத்தை — எடுத்துக் காட்டுகிறார்.

இந்த நூல் இந்தியாவைப் பற்றியது மட்டுமன்று. உலக அரசியல் இன்று போகிற போக்கைப் பற்றி விவாதிக்கும் நூலாகும்.

எஸ். வீ. எஸ்.

*A Dangerous Place:*
*Allied Publishers, pvt. Ltd., Madras-2.*

---

ஜூடோ பள்ளிகள் நடத்தும் விளையாட்டு வீரர் மைக்கேல், தம் கண்ணெதிரே நடுத்தர வயதினரொருவர் கொடூரமாகத் தாக்கப்பட்டு மரணமடைவதைக் காண்கிறார். போலீஸினால் சாட்சி சொல்ல அழைக்கப் படுகிறார். இந்தக் கொலைக்குப் பின்னணியாக இருக்கும் பணமுதலை கார்போன், மைக்கேலுக்கும் அவரது குடும்பத்தாருக்கும் பல வகையிலும் தொல்லை தருகிறான். மைக்கேலின் தங்கைக்குத் திருமணத்திற்காக நிச்சயிக்கப்பட்ட வாலிபன், கார்போனின் ஆட்களால் கொல்லப் படுகிறான். 'சாது மிரண்டால் காடு கொள்ளாது' என்பது போல அதுவரை பொறுமையாயிருந்த மைக்கேல் கார்போனையும், அவனது கூட்டத்தாரையும் புளியம்பழம் போல் ஒவ்வொருவராக வீழ்த்துகிறார். துணித்தீப்பந்தம் விட்டெறியப் பட்டு உயிரோடு ஓர் ஆள் கொளுத்தப் படும் காட்சி, புல்டோஸர் உதவியுடன் கொலையாளி கார்போனை அவன் வீட்டோடு சேர்த்துத் தவிடுபொடியாக்கும் கட்டம் ஆகியவை நிச்சயம் பிரமிப்பூட்டும்! - த. மூ. ரா.



# தியாக வல்லபன்

## விக்கிரமன்

அவள் உடலெங்கும் ஒரு புத்துணர்ச்சி. ஆனந்த அனுபவம். மார்புக் கச்சை நனைந்தது. குழவியின் செம்பவள உதடுகளின் ஸ்பரிசம் அவளை இந்த உலகத்தை மறக்கச் செய்தது. அவள் கங்காபுரியை மறந்தாள். சோழ கேரள மாளிகையை மறந்தாள். அருகே, வியப்புடனும் திகைப்புடனும் நோக்கும் தாதியை மறந்தாள். குழந்தை அழு குரலை நிறுத்தியதையும், குழந்தைகளுக்குப் பெண் ஒருத்தி பாலூட்டுவதையும் கண்டு மெல்ல தன் இருக்கையிலிருந்து எழுந்து வரும் பெரியபிராட்டியை மறந்தாள். அவள் சஞ்சரிக்கும் உலகம் தனியானது. விசித்திரமானது. சுவர்க்கப் போக இன்பங்களையும் விடப் பேரின்பம் அளிக்க வல்லது. தன் வயிற்றில் பிறந்து ஐந்தே நாட்கள் இருந்து இறந்து விட்ட அதே குழந்தை மீண்டும் தன் மடியிலிருந்து பால் குடிப்பது போன்ற உணர்வு அல்லிக்கு.

''யாரம்மா நீ. இதுவரையில் உன்னைப் பார்த்ததில்லையே. குழந்தைக்குப் பாலூட்டும்படி யார் உனக்குச் சொன்னது?'' என்று பெரியபிராட்டியார் அவள் அருகே வந்து அவளை உற்றுப் பார்த்தவாறு கேட்டாள்.

இந்த உலகத்துக்குப் பிடித்துத் தள்ளப் பட்டாள் அல்லி. குழந்தை அழுகையை நிறுத்தி உறங்கி விட்டிருந்தது.

''நானு... நானு...'' என்று அல்லி, பெரிய பிராட்டியைப் பார்த்தவாறு ஏதோ சொல்ல முயன்றாள். குழந்தையைக் கீழே கிடத்தவே அவளுக்கு மனமில்லை.

அவள் தடுமாறுவதைப் பார்த்த பெரிய பிராட்டி கையமர்த்தி ''அழும் குழந்தையைச் சமாதானப் படுத்தும் மாயசக்தியை வைத்திருக்கிறாயே, பெண்ணே நீ யார்?'' என்று வியப்புடன் கேட்டாள்.

''மாயசக்தி ஒன்றுமில்லை அம்மா, தாய்மையின் சக்திதான்'' என்று கூறித் தன்னை, பெருமான் நம்பி அனுப்பிய செய்தியை விவரமாகக் கூறி, ''இளவரசரைக் காப்பாற்றும் பொறுப்பு எனக்கு ஏற்பட்டது முன்பிறவிப் புண்ணியம்தான்'' என்றாள். பிறகு குழந்தையைக் கீழே மெல்ல வளர்த்தி விட்டு, பெரியபிராட்டியை மண்டியிட்டு வணங்கி, ''என்னை வாழ்த்தி ஆசி கூறுங்கள்'' என்றாள்.

''பெண்ணே, ராஜராஜனின் மகனைக் காப்பாற்றும் யாரும் நீடூழி வாழ்வார்கள்'' என்று ஆசி கூறினாள்.

''குழந்தைக்காக நான் நோய் நொடியின்றி உயிருக்கு அபாயமின்றி வாழ்ந்தாக வேண்டும். மாளிகைக் காவல்காரர்களிடம் கூறி இங்கே உடனே காவலுக்கு ஏற்பாடு செய்யச் சொல்லுங்கள்'' என்றாள்.

பெரியபிராட்டி மெல்லச் சிரித்தவாறு, ''பெண்ணே! நீ அஞ்ச வேண்டாம். நமக்கு யாரம்மா விரோதிகள் இருக்கிறார்கள்? குழந்தைக்கு ஒன்றும் நேராது'' என்றாள்.

ஆனால் அல்லிக்கு ஒவ்வொரு கணமும் பயம் தோன்றிக் கொண்டே வந்தது. இரவு நெருங்க நெருங்க அவளுடைய அச்சம் அதிகரித்தது. தொட்டிலில் தவழும் மூத்த குழந்தை-ஒரே வயது நிறைந்த குழந்தைக்குத் தாய்ப்பால் தேவைப்படவில்லை. இரண்டாவது குழந்தை ஒரே மாதம் நிறைந்த குழந்தை அல்லியின் மடியை விட்டுப் பிரியவில்லை.

மாளிகை அயர்ந்து கண் உறங்கும் நேரம். காற்றில் மரங்கள் அசைந்தாடிக் கொண்டிருந்தன. பின்னிலவுச் சந்திரனின் மங்கிய ஒளி இருளை எதிர்த்துப் போரிட முயன்று கொண்டிருந்தது. பாதியில் விழித்துக் கொண்ட பறவைகள் சில 'சடசட' என்று ஓசையை ஏற்படுத்தின. அல்லி தூங்கியும் தூங்காமலும் அருகே குழந்தையை அணைத்தவாறு படுத்துக் கொண்டிருந்தாள்.

'சடக்' என்ற மெல்லிய காலடி ஓசை கேட்டது. திறந்த சாளரத்து வழியே வீசிக் கொண்டிருந்த மதி ஒளியில் ஓர் உருவம் நகர்ந்து வருவது தெரிந்தது.

அல்லி நன்றாக விழித்துக் கொண்டாள். கண்களை மலர விழித்துப் பார்த்தாள். குழந்தையை எடுத்து மடியில் வைத்துக் கொண்டாள். அடிமேல் அடி வைத்து நகர்ந்து வரும் உருவம் கோவிந்தன் என்பதை ஒரு கணத்தில் உணர்ந்து கொண்டாள் அல்லி. அவள் உடல் நடுங்கியது.

### அத்தியாயம் 9

### விழிக்குத் துணை..

துங்கபத்திரை ஆற்றங்கரையை ஒட்டி அமைந்திருந்த சிறு வீட்டில் நால்வர் அமர்ந்து தீவிரமாகப் பேசிக் கொண்டிருந்தனர். மூன்று பேர் கொச்சைத் தமிழில் பேசினர். அவர்களுள் வயதில் இளைஞன் ஒருவன் மட்டும் தெளிவாகத் தமிழில் பேசியதுடன், தெலுங்கிலும் வார்த்தைகள் சிதையாமல் பேசினான்.

அவன் பேசும்போது அவனுடைய முகத்தையே மற்றவர்கள் காந்தத்தால் கவரப் பட்டவர்கள் போல் உற்று நோக்கிக் கொண்டிருந்தனர். அவனுடைய பேச்சும், பேசும் போது ஏற்படும் முகபாவமும் அவர்களைக் கவர்ந்திருக்க வேண்டும். அகன்ற நெற்றியும் ஒளிவீசும் விழிகளும் அவர்களைக் கவர்ந்திருக்க

வேண்டும். ஒளி விழிக்கு நிகரான அழகிய நாசியும் நாசியின் கீழே சற்றுப் பெண்மையின் சாயலை அளிக்கும் அதரங்களும் அவர்களை மகுடியில் கட்டுண்ட நாகம் போல் கவர்ந்திருக்க வேண்டும்.

அவனைவிட வயதில் மூத்தவர்களான மூன்று பேர்களும் அவனிடமிருந்து வரும் யோசனைகள் ஒவ்வொன்றையும் உற்சாகமாக வரவேற்றதிலிருந்து அவர்களுக்கு, அந்த இளைஞனிடம் பரிபூரண நம்பிக்கை இருப்பது தெரிய வந்தது.

''வல்லபா, கடைசியாக, உன் முடிவு தான் என்ன? ஒரு வார்த்தை உம் என்று சொன்னால் நாங்கள் படைகளுடன் மாளிகையைச் சூழ்ந்து கொண்டு உன் சிற்றப்பனைத் தாக்கிக் கொன்று விடுகிறோம்!'' என்று ஒருவன் பரபரப்புடன் கூறினான். அப்போதே எழுந்து சென்று விடுவது போன்ற துடிப்பு அவனிடமிருந்தது. அவனுடைய கரம் உடைவாளைத் தொட்டுக் கொண்டிருந்தது. மற்ற இருவரும் மீசையை மெல்ல முறுக்கி விட்டுக் கொண்டிருந்தனர்.

வல்லபன் மெல்ல நகைத்தான். சிரிக்க வேண்டிய சமயம் அதுவன்று. சீற்றமுடன் கிளர்ந்தெழுந்து ''வாருங்கள், புறப்படுவோம்'' என்று பொங்கி எழும் பொழுதில், வல்லபன் 'அமைதி அமைதி' என்று கை அமர்த்துகிறான். தாக்குவது, மல்லுக்கு நிற்பது, வாளெடுத்து நேருக்கு நேர் போரிடுவது போன்றவற்றில் மிகத் திறமை படைத்த வல்லபன் அமைதியை உபதேசிக்கிறான்.

அவனுடைய நலனுக்காகத்தான் அந்த மூவரும் அங்கே அடிக்கடி யோசிக்கிறார்கள். திட்டமிடுகிறார்கள். கீழைச் சாளுக்கிய நாட்டின் படை வீரர்களிடையே முக்கிய பதவிகளை வகிப்பவர்கள் அவர்கள். ஐந்து ஆண்டு



களுக்கு முன்பு மீசை அரும்பாப் பாலகனும் வேங்கிக்கு வந்தபோதே அவன்தான் வேங்கியின் அரியணையில் அமர வேண்டிய நியாயமான வாரிசு என்பதை உணர்ந்து கொண்டார்கள். வல்லபன் என்ற பெயரே அவர்களைப் பெரிதும் கவர்ந்தது. அவனுடைய வடிவழகு, திண் தோள்கள் யாவும் அவர்களைக் கவர்ந்தன. கீழைச் சாளுக்கிய நாட்டை ஆளக் கூடிய நியாயமான வாரிசு வல்லபன் தான் என்பதை அறிந்து கொண்டார்கள். வல்லபனுடைய சோகக் கதையை அவர்கள் கேட்டறிந்தார்கள். அவனுடைய தந்தை கரூரில் சேரநாட்டு அரசப் பிரதிநிதியாயிருந்தவர். திடீரெனச் சென்ற இடம் தெரியவில்லை. கணவனைக் காணாத துயரத்தால் வாடிய அவன் தாய் அறிவுடைச் செல்வி, வல்லபனின் திருமுகத்தைப் பார்த்தே தன் துயரத்தை மறந்து வாழ்ந்து வந்தாள்.

தன் மகன் என்றாவது ஒருநாள் அரசனாவான் என்று அவளுடைய உள்ளுணர்வு சொல்லிக் கொண்டேயிருந்தது. கீழைச் சாளுக்கிய நாட்டில் வாரிசு இல்லாது, அரசர் இறந்துவிடவே வல்லபன்தான் நியாயமான உரிமை உடையவன் என்பதை அறிந்தாள் செல்வி.

கங்கை கொண்ட சோழபுரத்தில் எளிய வாழ்க்கை நடத்தத் தொடங்கிய செல்வி, தன் மகனை வீரனாகவும், அறிவுடையவனாகவும் வளர்த்தாள். தனது சகோதரனும் வல்லபனின் மாமனுமான சோழ மன்னர் இராஜராஜன் தன்னைத் திரும்பியும் பாராது அலட்சியமாக இருப்பதாகப் பல தடவை அவளுக்குத் தோன்றியதுண்டு. அதனாலெல்லாம் அவள் வேதனைப் பட்டதில்லை. வருத்தப் பட்டதில்லை. கோபங் கொண்டதும் கிடையாது. அவளுடைய இலட்சியமெல்லாம் தன் மகன் கீழைச் சாளுக்கிய நாட்டின் அரசனாக வேண்டும், முப்பாட்டனார்கள் குலோத்துங்கன், விமலாதித்தன் போல் சிறந்த மன்னராக வேங்கியில் இருந்து அரசாள வேண்டும் என்பதே.

ஆஞ்சநேயரின் வீரத்தையும், இராமபிரானின் சீலத்தையும் வீர அபிமன்யுவின் தீரத்தையும் அர்ஜுனனின் தீரப் பிரதாபங்களையும் தன் மகனுக்குக் கதைபோல் எடுத்துக் கூறி அவன் உள்ளத்தில் வீர உணர்ச்சியை வளர்த்தாள். கீழைச் சாளுக்கிய நாட்டின் பெருமையையும், வேங்கி நகரத்தின் சிறப்பையும் அவ்வப்போது எடுத்துக் கூறுவாள். வல்லபன் உள்ளத்தில் வேங்கி நகருக்குச் செல்ல வேண்டும் என்ற உணர்ச்சி பெரிதும் வளர்ந்தது.



முதலில் தக்க துணையுடன் அவனை அனுப்பி வைத்தாள். வல்லபன் சில மாதங்கள் வேங்கியில் மட்டும் தங்கியிருந்து திரும்பி வந்தான். வரும்போதே வாள்வீச்சைக் கற்று வந்தான். ஒவ்வொரு முறையும் சென்று வரும்போதும் வல்லபன் திறமையை வளர்த்துக் கொண்டு வந்தான். திறமையை வளர்த்துக் கொண்டதுடன் உரிமையை உணர்ந்து கொண்டான். வேங்கியில் அவனுக்குப் பலர் நண்பர்களானார்கள்.

இம்முறை வல்லபன், கங்கை கொண்ட சோழபுரத்திலிருந்து புறப்படும் போது அவன் ''தாயே! எனக்கு ஆசி கூறுங்கள். வேங்கியின் அரியணையில் என்னை அமர்த்தி விட்டுத்தான் மறுகாரியம் பார்ப்பது என்று படைத் தலைவர்கள் பலர் உறுதி கொண்டிருக்கின்றனர். என்னுடைய முயற்சி வெற்றி அடைய வாழ்த்தி அருளுங்கள் அம்மா'' என்று வேண்டி எழுந்தபோது, செல்வி அவனுடைய நெற்றியில் திருநீறை அணிவித்து ''மகனே! என் இலட்சியம், நீ அரசனாக வேண்டும் என்பதே. இந்தக் கங்காபுரியில் சிறு குடிலில் வாழப் பிறந்தவனல்லன் நீ. சிறு வயதிலேயே உன்னை வேங்கிக்கு அனுப்பிய காரணம் நீ கீழைச் சாளுக்கிய நாட்டு அரசனாக வேண்டும் என்பதே. வேங்கியினின்று வந்தவர்களிடமிருந்து நான் தெரிந்து கொண்டேன், உனக்கு அங்கு ஆதரவு இருக்கிறதென்று. உன் வீரத்தைக் கண்டு அங்கு வியப்படையாதவர்களே இல்லையாமே? மேலைச் சாளுக்கிய நாட்டைச் சேர்ந்தவர்கள் அவ்வப்போது எல்லையை மீறிவந்து பசுக்களையும் ஆடுகளையும் கவர்ந்து சென்று விடுகிறார்களாம். ஒரு சமயம் நீ தன்னந்தனியனாக அவர்களை எதிர்த்துப் போரிட்டு மாடுகளை மீட்டு வந்தாயாம். எதிரிலிப் பெருமான் என்று உன்னை எல்லோரும் கொண்டாடுகிறார்களாமே! என்னிடம் இவற்றையெல்லாம் நீ ஏன் சொல்லவில்லை, மகனே., என்னுடைய பூரண ஆசி உனக்கு உண்டு. உன்னுடைய பாட்டனார் குலோத்துங்க சோழரைப் போல் நீ வீரப் பிரதாபங்களுடன் வாழ ஆசி கூறுகிறேன்... ஆனால்...'' என்று கூறி நிறுத்தினாள் செல்வி.

ஆசிரியர்: 'விடியற்காலம்' என்பது பன்மை என்று சொல்கிறாயே எப்படி?

மாணவன்: 'பல பல' வென்றுதானே விடிகிறது'

— தீபப் பிரியா



''சொல்லுங்கள் தாயே... நீங்கள் சொல்லிலிருந்து அணு அளவும் நான் மீற மாட்டேன்!'' என்று வல்லபன் தாயின் முகம் பார்த்து நின்றான்.

''வல்லபா! உன் உரிமையை மிகவும் அமைதியான முறையில் வற்புறுத்து. அமைச்சர்களிடம் எடுத்துக் கூறி வாதாடு. மக்களின் கருத்தைத் திரட்டி உருவாக்கு. இவை ஏதும் பலனில்லாவிடில் கடைசியாகப் போருக்குப் புறப்படு. போர் என்று அதைச் சொல்ல மாட்டார்கள். கலகம் என்பார்கள். கலகக்காரர்களைக் கொண்டு அரியணையைப் பிடிப்பது என் கருத்துக்கு ஏற்றதாயில்லை. உன்னை ஆதரிப்பவர்களின் எண்ணிக்கையை அதிகமாக்கு. பிறகு நான் என் சகோதரன் உன் மாமனிடம் உதவி கேட்கிறேன்'' என்றாள்.

வல்லபன் தாயின் சொல்லை அப்படியே ஏற்றுக் கொண்டான். விடை பெற்றுப் புறப்பட்டான்.

''எதிரிலிப்பெருமான், எதிர்ப்பிலிப் பெருமானாக எடுத்த காரியம் முடித்துத் திரும்பி வருக'' என்று தாய் ஆசி கூறினாள்.

''எதிர்ப்பிலிப் பெருமான்'' என்று ஒரு முறை அவன் தனக்குள்ளேயே சொல்லிப் பார்த்துக் கொண்டான். குதிரை மீது செல்லும்போது பயணத்தின் இடையே அந்த வார்த்தையை மற்றொருமுறை சொல்லிப் பார்த்துக் கொண்டான். அவன் இதழ்க் கடையில் நகை மலர் பூத்தது. அது இனிய மணத்தை வீசியது. அந்த மணத்துக்கு உரிய இள நங்கை தன்னருகே குதிரை மீதமர்ந்து வருவது போன்ற உணர்வு தோன்றியது.

அவள் தன் காதருகே நெருங்கி 'எதிரிலிப் பெருமான்' என்று கூறி முல்லைப் பற்கள் தெரிய நகைப்பது போல் தோன்றியது. அவன் கரங்கள் அவளது கன்னங்களை வருட வேண்டும் என்பதற்காக அசைந்தது. குதிரை களைப்பது கேட்ட பிறகுதான், குதிரை மீதேறிப் பயணம் செய்யும் நினைப்பு அவனுக்கு வந்தது.

அவன் தன்னிலையை அறிந்து இப்போது சிரித்துக்கொண்டான். அவன் உடல் ஒருமுறை சிலிர்த்தது. இப்படித்தான் முதன்முதல் அவள் ஸ்பரிசம் அவனுடைய மார்பிலே பட்டபோது அவன் உடல் முழுவதும் சிலிர்த்தது. ஓர் இளமங்கையின் மென்னுடலின் பூங்காற்று அவனை மெல்லத் தொட்டுச் சென்றது. அதுதான் முதல் முதல் அனுபவம்.

அந்தச் சம்பவத்தை மீண்டும் இப்போது நினைத்துக் கொள்வதால் அந்த இனிய நினைவுகள் பயணக் களைப்பைப் போக்கிவிடும் என்று எண்ணினான்.

**ப**ல மாதங்களுக்கு முன்பு மேலைச் சாளுக்கியர்களிடமிருந்து பசுக் கூட்டங்களை மீட்டு வந்த பிறகு அவன் களைப்பாறிக் கொண்டிருக்கும் போது, வயது முதிர்ந்த ஒருவரும், அவரைத் தொடர்ந்து இளமங்கையும் அவனைத் தேடி வருவதைக் கண்டு அவன் திகைத்தான்.

அந்தப் பெண் ஒரு பெரிய கூடையை இடுப்பில் சுமந்து கொண்டிருந்தாள். அவள் ஒயிலாக, ஒருபுறம் சாய்ந்தவாறு நடந்து வரும்

அழகை அவன் ரசித்திருந்த போது முதியவரின் குரல் அவன் கவனத்தைக் கவர்ந்தது.

''தம்பி! உன்னை எங்கெல்லாம் தேடி வந்தேன். இந்த ஆற்றங்கரையில் தன்னந்தனியாக இருக்கிறாய் என்பதை அறிந்தேன். உனக்கு நன்றி சொல்லி விட்டுப் போக வந்தேன். இவள் என்னுடைய பெயர்த்தி சந்திரப்பிரியா. இவளுடைய தந்தை இவளையும், பசுமந்தைகளையும் விட்டுவிட்டு, இதே போல் அந்தக் கொடிய சாளுக்கியர்களை எதிர்த்துப் போரிட்டபோது இறந்து விட்டான். அந்தக் கொள்ளைக்காரர்களுக்கு எப்போதுமே, எங்களுடைய பசுமந்தைகளின் மீது ஒரு கண். நீ இருந்திராவிடில் எனது செல்வம் முழுதும் பறிபோயிருக்கும். நீ தன்னந்தனியனாக ஒருவனே அவர்களை விரட்டியிருக்கிறாய். எனது நன்றியைத் தெரிவிக்க வந்தேன். எனக்குக் கண் பார்வை இப்போது குறைந்து வருகிறது. அதனால் துணையாக இவளை அழைத்து வந்தேன்'' என்றார்.

பாட்டனாரின் அருகே நின்று கொண்டிருந்த அவளை ஏற இறங்க வல்லபன் பார்த்ததைக் கண்டஅவள் தலையைக் குனிந்து கொண்டாள்.

''விழிக்குத் துணையாக வந்திருக்கிறாள். வாழ்க தங்கள் பார்வைக் குறைவு...'' என்று முணுமுணுத்துக் கொண்டான்.

''என்ன தம்பி சொல்கிறாய்?'' என்று முதியவர் கேட்டார்.

அவன் முணுமுணுத்தது சந்திரப் பிரபாவுக்குக் கேட்டு விட்டது. அவள் சிரித்துக் கொண்டாள். வல்லபனும் அவளைப் பார்த்துச் சிரித்தான். அந்தச் சிரிப்பிலே ஏற்பட்ட புதுவித உணர்ச்சிகள் மெல்ல மெல்ல உள்ளத்தே நுழைந்து கொண்டிருக்கும் பருவம்.

''இதெல்லாம் எதற்குப் பாட்டா?'' என்று வல்லபன் முதியவரை நோக்கிக் கேட்டான். அவள் கூடையை இறக்கிக் கீழே வைத்திருந்தாள். அதில் மாங்கனிகள் இருந்தன. ஒரு குலை வாழைப் பழம் இருந்தது.

''எங்களது நன்றியைத் தெரிவிக்க இவை'' என்றாள் அவள். கனியை விடக் கன்னியின் குரலில் இனிமை இருந்தது. மற்றுமொரு முறை வல்லபன் அவளை நோக்கினான். அவள் தரையில் கால் விரலால் கோலம் போட்டுக் கொண்டிருந்தாள்.

''தம்பியை வீட்டுக்கு அழைக்க வந்தோம். அங்கே உனக்கு விருந்தளித்து, புத்தாடைகள் தருவதாக எண்ணியுள்ளோம்'' என்று முதியவர் கூறினார். குரலில் நன்றி நிறைந்திருந்தது. வல்லபன் மறுக்கவில்லை.

வல்லபன் ஒருமுறை அவர்கள் வீட்டுக்குச் சென்றான். பிறகு பல முறைகள் அவள் அவனைத் தேடி ஆற்றங்கரை வீட்டுக்கு வந்தாள். ஒரு முறை வல்லபன் தெற்கே கங்காபுரிக்கு வந்து விட்டுச் சென்ற போது பிரிந்திருந்த ஆறு மாதங்கள் அவளுக்குப் பல யுகங்களைப் போல் தோன்றின. இப்பொழுது வல்லபன் கங்காபுரிக்குச் செல்லும் போது, அவனிடம் விடைபெறும் போது அவள் அடைந்த துயரத்துக்கு அளவில்லை. ஏதோ விட்ட குறை தொட்ட குறை போல் அவள் வருந்தினாள்.

ஒரு பகடைக் காயின் மூன்று தோற்றங்கள் படத்தில் கொடுக்கப் பட்டுள்ளது. இதனைக் கொண்டு கீழ்க்கண்ட கேள்விகளுக்கு விடை காணுங்கள்.

1) பிறைச் சந்திரனுக்கு எதிரே உள்ளது என்ன சின்னம்?
2) சூரியனுக்கு எதிர்ப் புறத்தில் உள்ளது எது?
3) நட்சத்திரத்துக்கு எதிர்ப் புறத்தில் உள்ளது என்ன?
4) முதல் பகடையின் கீழ்ப்பக்கம் உள்ளது எது?
5) இரண்டாவது பகடையின் கீழ்ப் பக்கம் இருப்பது எது?
6) மூன்றாம் பகடையின் கீழ்ப்பக்கம் என்ன இருக்கிறது?



விடை:

1) வட்டம் 2) சதுரம் 3) முக்கோணம் 4) சூரியன் 5) நட்சத்திரம் 6) பிறைச் சந்திரன்

- இராம. குமாரசுவாமி.

---

வல்லபன் கங்காபுரியிலிருந்து திரும்பி விட்டான் என்றறிந்த போது அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. இந்த ஆறு மாதங்கள் அவளிடையே பெரிய மாறுதலை ஏற்படுத்தியிருந்தன. பருவத்தின் அபிஷேகம் உடல் முழுவதும் பரவியிருந்தது.

வல்லபன் வந்த நாளிலிருந்து அவள் மிகவும் சுறுசுறுப்பாக இருந்தாள். அவனைச் சந்திக்க வரும் போதெல்லாம் அவனுடன் யாராவது இரகசியமாகப் பேசிக் கொண்டிருப்பார். குடிலின் முன்வாயில் ஓரமாகப் பேச இயலாமல் நின்று விட்டுப் போய் விடுவாள். அவள் புரிந்து கொண்டாள், வல்லபன் மேற்கொண்டுள்ள உரிமைப் போராட்டத்தை.

வல்லபன் அரச பரம்பரையைச் சேர்ந்தவன் என்று அறிந்த போது ஏற்பட்ட குதூகலத்தின் அளவைச் சொல்லி முடியாது. பாட்டனாரிடம் சென்று அவர் தோளைக் குலுக்கி, ''தாத்தா, அவர் ஓர் அரச குமாரரா?'' என்று கேட்டாள்.

''அவர் என்றால்... யாரையம்மா சொல்கிறாய் குழந்தாய்?'' என்று முதியவர் கேட்டார்.

அவள் முகம் சிவந்தது. அந்த நாணம் திடீரென அவள் முகத்தில் வந்து கலந்து கொள்ள என்ன காரணம்? அந்த நாணம் இவ்வளவு காலம் எங்கே சென்றிருந்தது? அவள் உடலில் இலேசான அதிர்ச்சி ஏற்பட்டு, புதிய புரிய முடியாத இன்பத்தை ஏற்படுத்துகிறதே. அந்த அனுபவம் இவ்வளவு நாட்கள் எங்கே சென்றிருந்தது? வல்லபனைக் காணும்போது இதயம் படபடக்கிறதே, இந்தப் படபடப்பு இவ்வளவு காலம் எங்கே மறைந்திருந்தது!

முதியவர் மெல்ல நகைத்துக் கொண்டார். அவருக்குப் புரிந்து விட்டது. ''யாரைச் சொல்கிறாய்? எதிரிலிப் பெருமானையா? நானும் அவனைச் சாதாரணப் படைவீரன் என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். அவன் இந்த நாட்டை ஆளும் உரிமை பெற்றவன். அவன் தன் கட்சிக்கு நியாயமானவர்களைச் சேர்த்துக் கொண்டு வருகிறான். தன் உரிமையை நிலைநாட்ட அரசரிடம் நேரே சென்று கேட்கப் போகிறானாம்'' என்றார். (தொடரும்)



# மழைக்கு உதவாத குடை

— கமலா இராமமூர்த்தி —

பிற்பகல் இரண்டு மணிக்கெல்லாம் வானம் மப்பி, மூடி இருட்டிக் கொண்டது. இடியின் உறுமல் அவ்வப்போது கேட்டது. சில நிமிஷங்களில் லேசாகத் தூறல் ஆரம்பித்து, தூறல் கனத்து மழையானபோது அது பல மணிநேரம் விடாத வகையைச் சேர்ந்ததாகத் தோன்றியது. கடற்கரைச் சாலையில் கார்கள் விளக்குப் போட்டுக் கொண்டு சென்றன. அவற்றின் முன்புறக் கண்ணாடிகளில் வழியும் நீரைத் துடைக்கும் ''வைப்பர்கள்'' விசுக் விசுக் என்று வேலை இல்லாதவர்கள் வேலை கிடைக்கப் பெற்றது போலச் சுறுசுறுப்பாக இயங்கின.

வகுப்பறையில் மாணவ மாணவியர்களின் கவனம் பாடத்தில் இல்லை. எப்படி வீடு போய்ச் சேரப் போகிறோம் என்று பாடம் சொல்லித் தரும் வல்லபனே யோசித்துக் கொண்டிருந்த போது மாணவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்?

அவன் எதிர்பார்த்ததை விடச் சீக்கிரமாகவே வகுப்பு முடிவடைந்தது. 2.40க்கு பியூன் பங்காரு சாமி வழுக்கைத் தலையைத் தடவிக் கொண்டு வாயில் புகையிலையைக் குதப்பிக் கொண்டு, சீட்டு ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தான். மழை காரணமாக 2.45 மணிக்கு அன்று கல்லூரி வகுப்புக்கள் முடியும் என்று வந்த அறிவிப்பை வல்லபன் படித்துச் சொன்னதும் எல்லோருக்கும் ஒரே உற்சாகம், கும்மாளம், கைதட்டல், ஹாய் ஹூய் என்று கூச்சல்! எல்லோரும் திமுதிமு வென்று, படம் முடிந்ததும் சினிமாவை விட்டு வெளியேறுவது போல அடித்துப் புடைத்துக் கொண்டு வெளியேறினர்கள்.

முன் வரிசையில் ஸ்ரீலதா மட்டும் நிதானமாகப் புத்தகங்களை அடுக்கி வைத்துக்கொண்டிருந்தாள், கடைக் கண்ணால் போகிறவர்களைப் பார்த்தவாறு. அவள் நிற்பதன் காரணம் வல்லபனுக்குத் தெரியும். அந்தக் காரணம், பின் வரிசையில் உட்கார்ந்திருந்த ஆறடி உயரமும், அழகான தோற்றமும் படைத்த இளைஞனை நந்தகோபால் வடிவில் அவன் அருகில் வந்து நின்றதும்தான் அவள் எழுந்தாள். நந்தகோபால் அவள் முன்னே செல்ல வழிவிட்டுப் பின்னால் சென்றான். இருவரும் வல்லபனுக்கு 'குட் ஈவினிங்' சொல்லி விட்டுச் சென்றனர்.

ஏழு ஆண்டுகளுக்கு முன்பு வேறு ஒரு இடம், வேறு ஒரு கல்லூரி. அப்போது அவனும் நந்தகோபால் போல் ஒரு மாணவனாக இருந்தான். அப்போது அவனுக்கும் ஒரு அவள் இருந்தாள். அந்தக் காவேரியின் நினைவு அவனுக்கு இப்போது வந்தது. அவனை வேண்டாமென்று ஒதுக்கி விட்டு, அவள் மணந்து கொண்டு போன எலெக்ட்ரானிக் எஞ்ஜினியர் கணவனுடன் எங்கோ கனடாவில் வாழ்க்கை நடத்தும் அவளை ஏன் அவன் இப்போது நினைக்கிறான்? மூன்று ஆண்டுகள் இனிக்க இனிக்கப் பழகிவிட்டு, பரஸ்பரம் சாகாத சத்தியங்களை எல்லாம் தந்து, ஏற்று— அவற்றையெல்லாம் கணப் பொழுதில் பொய்யாக்கி விட்டுப் போன அந்தக் காவேரி போலத்தான் இந்த ஸ்ரீலதாவும் ஒரு நாள் அவனை நேசிக்கும் நந்தகோபாலை நாசப்படுத்துவாளோ? அவனுக்கு நந்தகோபால் மீது ஒரு பரிதாபம் பிறந்தது. இல்லை, இல்லை! நந்தகோபால் தன்னைப் போன்றவன் இல்லை. அவனிடம் ஒரு முரட்டுத் தன்மை தெரிந்தது. அவன் உறுதியான தோள்களில், தசைகளில், பார்வையில், அலட்சியத்தில் அது மிளிர்ந்தது.

மீண்டும் காவேரி என்ற வறண்ட கொப்பை அவன் மனக்குரங்கு பற்றிக் கொண்டு ஆடியது...

அன்றும் இப்படித்தான் மழை பெய்தது. காவேரியும் அவனும் திட்டமிட்ட அகஸ்மாத்தாக அமெரிக்கன் கான்ஸலேட் லைப்ரரியில் சந்தித்தனர். அவளிடம் குடை இல்லை. அவன் குடை கொண்டு வந்திருந்தான். லேசாகத் தொடங்கிய மழை நிற்பதாகவே இல்லை. அவள் பயப்படத் தொடங்கினள். ''அப்பா என்னைத் தேடுவார் வல்லப்! அம்மா கவலைப் படுவாள்!''



"இந்த மழையில் போனால் உனக்கு நிச்சயமாக ஜலதோஷம் பிடித்து விடும். அப்புறம் நியூமோனியா அது இது என்று வந்தால் அந்தக் கவலையில் என் உயிர் போய்விடும்."

"டோண்ட் டாக் ரப்பிஷ்!" என்று அவள் பொய்க் கோபத்தோடும், நிஜக் கரிசனத்தோடும் அவன் வாயைப் பொத்த, அவன் அவளை அடக்க முடியாத ஆர்வத்தோடு தோளைச் சுற்றிக் கையால் அணைத்துக்கொள்ள காத்திருந்த சில கட்டுப்பெட்டிகள் அவர்களைப் பொறாமையுடனும், குற்றம் கண்டு கண்டிக்கும் முறையிலும் பார்க்க, அவள் தன்னை அவன் அணைப்பிலிருந்து மெல்லத் தயங்கி விடுவித்துக் கொள்ள.. அப்புறம் அவனுடைய குடையினடியில் அந்தக் குளிர் படும் ஈரமான இருண்ட மாலைப் பொழுதில் ஒருவருடன் ஒருவர் ஒட்டிக் கொண்டு, உடல்கள் தத்தம் கதகதப்பைப் பங்கிட்டுக் கொள்ள, உள்ளங்கள் ஆயிரங்கோடி 'வாட்' பிரகாசத்தில் ஜொலித்து முகங்களை ஒளியால் நிரப்ப — இந்த உலகத்திலேயே உள்ள ஒரே ஆணும் பெண்ணுமென அவர்கள் 'டிரைவ்–இன்'னுக்குப் போனதும் மசாலா தோசையும், காஞ்சீபுரம் இட்லியும் சாப்பிட்டதும், பிறகு அவன் அவளை பஸ்ஸில் ஏற்றி விட்டுவிட்டு, இன்னும் லேசாக விழுந்து கொண்டிருந்த மழையினூடே மெல்ல நடந்து அவன் ராயப்பேட்டை ஹாஸ்டலுக்குப் போனதும்...

ஒரு பெருமூச்சு விட்டுப் பழைய நினைவுகளிலிருந்து விடுபட்டு இன்றைய மழை கொட்டும் மத்தியானத்திற்குத் திரும்பவும் மீண்டான் வல்லபன்.

காலியான வகுப்பறையில் அவன் மட்டும் தனியாக லெக்சரரின் மேஜையில் உட்கார்ந்திருப்பதைப் பார்த்த பங்காருசாமி பொறுமையை இழந்து கொண்டிருந்தான். ஐயா போனால்தான் அவனால் மின்விசிறியையும் விளக்குகளையும் நிறுத்தி விட்டு, அறையைப் பூட்டி விட்டுப் போக முடியும். அவனைக் காக்க வைத்துவிட்ட சங்கடம் மனத்தில் நெருட, "ஸாரி பங்காருசாமி" என்று பியூனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வல்லபன் கிளம்பினான். வெளியே மழை சற்று விட்டிருந்தது.

"வினோதாம்மா உங்களைக் கேட்டாங்க" என்று பங்காருசாமி சொல்லிக் கொண்டே அறைக்குள் நுழைந்தான்.

வினோதா ஆசிரியர்கள் கூடும் அறையில் காத்திருந்தாள். மழை விடத் தொடங்கியிருந்ததால் மற்றவர்கள் கிளம்பி விட்டார்கள் போலும். அவள் தனியாக இருந்தாள்.

"நீ கிளம்பவில்லையா? மழை குறைந்திருக்கிறதே?"

"இல்லை, முழுக்கவிடட்டும் என்று பார்த்தேன். நான் குடையும் கொண்டு வரவில்லை. நீங்களும் வகுப்பிலிருந்து இன்னும் வரவில்லை என்று பியூன் சொன்னான்."

ஓர் ஆவலுடன் அவள் அவனைப் பார்த்தாள். "மிஸ் வினோதா," "நீங்கள்" என்று பேசிய விதங்கள் போய் இப்போது 'வினோ' என்றும் 'நீ' என்றும் அவளை அழைக்கும் நிலைக்கு அவன் வந்து விட்ட வழித் தடத்தை வல்லபன் நினைத்துப் பார்த்தான். அவள் மட்டும் அவனை "மிஸ்டர்" போட்டு அழைப்பதை விட்டு விட்டாலும், இன்னமும் "நீங்கள்" என்று மரியாதையுடன், ஏன், ஒருவித பக்தியுடன் கூட அவனிடம் பேசினாள். அது அவனுக்குப் பிடித்திருந்தது. தெம்பு வந்தது.

வினோதா காவேரி மாதிரி இல்லை. நெருக்கம் கூடி வரும் அவர்களிடையிலான உறவு எந்த அளவுக்கு இறுகி உரிமைகள் தந்தாலும் அவள் அவனை "நீ" என்று அழைக்கவே மாட்டாள். அவள் அவனை விட நான்கு ஆண்டுகள் இளையவள். சேலத்தில் படித்து, பிறகு சென்னைக்கு வந்து ஹாஸ்டலில் தங்கி கெமிஸ்டரி எம். எஸ் ஸி. படித்துத் தேறி லெக்சரர் உத்தியோகத்திற்கு வந்தவள். மத்திய தர வகுப்புக் குடும்பத்தில் ஒரே பெண். அப்பா ரயில்வேயில் பணிசெய்து ஓய்வுபெற்றவர். அவள் அப்பாவும், அம்மா

வும் பெண்ணிற்குத் திருமணம் ஆகவில்லையே என்று கவலைப் பட்டுக் கொண்டிருக்கின்றனர்.

இதையெல்லாம் வல்லபன் அவளிடம் பேசியும் கணித்தும் தெரிந்து கொண்டிருந்தான்.

வல்லபனை விநோதாவுக்கு மிகவும் பிடித்து விட்டிருந்தது. "நீங்கள் என்னை ஒரு மனிதப் பிறவியாகக் கருதுகிறீர்கள். பழகுகிறீர்கள். மற்ற ஆண்களின் இளிச்ச வாய்த்தனத்தைப் பார்த்துக் குமட்டிப் போகிறது எனக்கு!" என்று ஆரம்ப நாட்களில் சொல்லியவள் கொஞ்சம் கொஞ்சமாக அவன் மனத்தில் அவனையும் அறியாமல் அவனுக்கு நெருக்கமான, மேலான நிலைக்கு வந்து விட்டாள். இதுவும் அவனுக்கு நன்கு தெரிந்தது.

அவளைப் பற்றித்தான் அவனுக்கு இன்னும் சரியாகப் புரியவில்லை.

விநோதாவை அவனுக்கும் ரொம்பப் பிடித்திருந்தது. அவள் எளிமை, கல்மிஷமின்மை ஆகியவை அவனைக் கவர்ந்தன. ஆனால் இவற்றை எல்லாம் கடந்து அவள் அவனை விரும்பும் ஒரு பெண் என்ற எண்ணம் அவனுக்கு அச்சத்தையும் கலந்து தந்தது.

"என்னை நான் பாட்டுக்கு உங்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் ஏதோ பகற்கனவு கண்டு கொண்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டாள் விநோதா. மீண்டும் வெளியே மழை கனத்துக் கொண்டிருந்தது.

"ஸாரி, விநோ, நீ என்ன சொல்லிக் கொண்டிருந்தாய்?"

"மழை பெய்கிறது. குடை இல்லை. ஆகையினால் கிளம்பவில்லை என்றேன்!"

---

உலகின் பல பகுதிகளிலும் சிவலிங்க வழிபாடு தொன்று தொட்டு வழக்கிலிருந்து வந்துள்ளது. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் ரோம் நாட்டில் பூர்வீகக் குடிமக்களான இட்ருஸ்கன் (Etruscans இனத்தினர் வளைந்த பீடத்திலே நிறுத்தப்பட்ட ஒரு கல்லை வணங்கி வந்துள்ளதாக உலக சமயங்களின் கலைக் களஞ்சியம் தெரிவிக்கிறது. இதனை அவர்கள் "சல்வர்" என அழைத்தனர். ரோம் நாட்டில் கிடைத்த சிவலிங்க உருவந்தான் இங்கே காணப்படுவது. இவ்வுருவத்தை வாட்டிகனில் உள்ள அரும்பொருள் காப்பகத்தில் இன்று ஒரு காட்சிப் பொருளாக வைத்துப் பாதுகாக்கின்றனர்.

தகவல்: எஸ். பத்மநாபன்.



விநோதாவைத் தன் குடையிலேயே சேர்த்து அழைத்துக் கொண்டு போகலாமா? அது சரி, இது அவன் சொந்த எண்ணமா? அவள் சாதுரியமாக அவன் உள்ளே உருவாக்கிய ஒன்றா?

அப்படிப் போனால் அவர்கள் அங்கங்கள் ஒன்றுடன் ஒன்று படும். அந்தக் கதகதப்பு குளிருக்கு இதமாக இருக்கும். ஆனால் எதிலே போய் அது எல்லாம் முடியும்?

வல்லபன் விநோதாவைப் பார்த்தான். "விநோ, என் குடையை நீ எடுத்துக் கொண்டு போ! நீ மழையில் நனைந்தால் உடம்புக்குத் தாங்காது!" என்றான்.

அவள் கண்களில் ஏமாற்றம் தெரிந்தது. அதை வெற்றி கொள்ள விடாமல் தடுக்க அவள் அப்போதும் முயன்றாள்.

"இல்லை, நீங்கள் மட்டும் நனைந்து உங்களுக்கு ஏதாவது உடம்புக்கு வந்தால் எனக்கு மட்டும் அது தாங்குமா?" என்று புன்சிரிப்பை வரவழைத்துக் கொண்டு கெஞ்சுதலாகச் சொன்னாள்.

வல்லபனை இரண்டு வலிய குதிரைகள் மாறு திசைகளில் ஒரே சமயத்தில் இழுத்தன. "தயங்காதே. அவளை உன்னுடன் அழைத்துக் கொண்டு போ!" என்றது லட்சணங்கள் பொருந்திய வெண்குதிரை. நக்ஷத்திரங்கள் அதன் கண்களில் மின்னின. "வேண்டாம். அவள் உன்னை ரொம்ப நாட்கள் நினைத்திருக்கப் போவதில்லை!" என்று கனைத்து இழுத்தது கரும் புரவி. அதன் கண்களில் பாதாள ஜ்வாலைகள் வெப்பம் கக்கின.

"என் உடம்பை நான் பார்த்துக் கொள்கிறேன். நீ கவலைப்பட வேண்டாம். மழை விடும் வரை காத்திருந்து கிளம்பினால் போயிற்று. நீ கிளம்பு விநோ!"

அவன் அவளைப் புரிந்து கொள்ளவில்லையா அல்லது புரிந்து கொண்டுதான் இப்படிப் பேசுகிறானா என்று விநோதாவிற்குத் தெரியவில்லை.—பெண்மை வலியதுதான். ஆனால் சமுதாயத்தின் அமைப்பும் பழக்க வழக்கங்களும் அதன் வலிமைக்கும் எல்லைகள் வகுத்திருக்கின்றனவே! அந்த எல்லைகள் இப்போது அவள் செயலையும் சொல்லையும் கட்டுப் படுத்தின.

விநோதா விருட்டென்று எழுந்து போனாள்.

"விநோ!" என்று அவன் அவளைக் கூப்பிட்டான். அவன் கூப்பிட்டது அவளுக்குக் கேட்டதோ இல்லையோ, அவள் அவனைத் திரும்பிப் பார்க்காமலேயே போய்விட்டாள்.

ஜன்னல் வழியே, அவள் புத்தகங்களைப் பிடித்த கையைப் புடவையினுள் வைத்துக் கொண்டு மழையில் போவது தெரிந்தது.

குடையை எடுத்துக் கொண்டு அவள் பின்னே போக நினைத்தான் அவன். ஆனால் ஏதோ பழைய நினைவுகளில் பின்னிக் கொண்டு அவ்வாறு போகாமல் ஜன்னலருகில் நின்று வெளியே பார்த்தவாறு பெருமூச்சுடன் நின்றிருந்தான். வெளியே நின்ற பங்காருசாமி மெல்ல இருமினான். ஐயா கிளம்பிப் போனால்தான் மின்விசிறிகளையும் விளக்குகளையும் நிறுத்தி விட்டு அறையைப் பூட்டிக் கொண்டு போக முடியும்.

## அத்தியாயம் 35

ஜெனரல் ஆஸ்பத்திரியின் ஸ்பெஷல் வார்டில் தனி அறை ஒன்றில் படுத்திருந்தான் சத்யா. நாலு இடங்களில் தையல் போட்டு மருந்து வைத்துக் கட்டி யிருந்தார்கள். ரத்தப் பரிசோதனை செய்து அவனுடைய குருப் ரத்தம் இரண்டு பாட்டில் ஏற்றி அவன் இழந்திருந்த குருதியை ஈடு செய்திருந் தார்கள். இப்போதும் 'ஸலைன் டிரிப்' கொடுத்துக் கொண்டிருந்தார்கள். ஒரு நர்ஸ் வந்து டெம்பரேச்சர் பார்த்துக் குறித்து விட்டு; டிரிப் சரியாகச் சொட்டு கிறதா என்று கவனித்து விட்டு, கலைவாசனை விடம், "இதுதான் கடைசி பாட்டில். இது தீர்ந்து போகிற சமயம் வந்து சொல்லு; எடுத்து விடலாம்" என்று கூறிச் சென்றாள்.

"அண்ணா! இப்போ எப்படி இருக்கு? வலி குறைஞ்சிருக்கா?" என்று கலைவாசன் கேட்டான்.

"உம்" என்று அவன் திருப்திக்காக முன கினான் சத்யா. உண்மையில் அவன் உடம் பெல்லாம் விண்விண்ணென்று தெறித்துக் கொண்டிருந்தது.

"அண்ணா! பிங்கி வந்து வெளியே காத் திருக்கா. 'உள்ளே வாயேன்' என்றால் பயப் படுகிறாள். 'உன் அண்ணாவிடம் பர்மிஷன் கேட்டுச் சொல்லு' என்கிறாள். பாவம் அண்ணா! அழுது அழுது அவளுக்கு முகமெல் லாம் வீங்கி இருக்கு. பார்க்காமல் திருப்பி அனுப்பிடாதே. வரச் சொல்லட்டா?"

"உம்" என்றான் சத்யா மறுபடியும். அதற்கு மேலும் பேச அவனுக்கு முடியும். ஆனால் உணர்ச்சிகள் அவனுள்ளே பொங்கிப் பிரவகித்துப் பேச முடியாமல் செய்தன.

கி.ராஜேந்திரன்

'பிங்கியா வந்திருக்கிறாள், என்னைப் பார்க்க? 'ஐ ஹேட் யூ ஐ ஹேட் யூ' என்று அழுத்தம் திருத்தமாக அறிவித்த அதே பிரமீளாவா? என்னுடைய ஃபோட்டோவை, ஃபிரேமை உடைத்து எடுத்துக் கிழித்து நெருப்பில் போட்டுப் பொசுக்கப் போவ தாகக் கூறிய அதே பிங்கியா?'

துக்கத்தின் மொத்த உருவமாகக் காட்சி தந்த பிங்கி, தூக்கத்தில் நடப்பவளைப் போல் நகர்ந்து முன்னேறினாள். கட்டிலருகே தரையில் மண்டியிட்டு சத்யாவின் வலக் கரத்தைப் பற்றிக் கொண்டு, "என்னை மன் னிச்சுடுங்க, என்னை மன்னிச்சுடுங்க" என்று திரும்பத் திரும்பச் சொன்னாள். அவன் உள் ளங்கைகளை நனைத்த அவள் கண்ணீர், அவனைப் புனிதப்படுத்தும் புண்ணிய நீராக இருந்தது.

அவன் தலையை மெல்ல வருடி, முதுகைத் தட்டிக் கொடுத்தான். "மன்னிப்புக் கேட்க வேண்டியவன் நானல்லவா?" என்று அவன் வாய் முணுமுணுத்தது. "என் நடத்தையால் உனக்கு எவ்வளவு மனக் கஷ்டம்?"

"நான்தான் உங்களை வெறுக்கிறதாச் சொல்லி, கோபமாப் பேசி, உங்க மனசை ரொம்பப் புண்படுத்திட்டேன்."

"அப்போ, நீ உண்மையில் என்னை வெறுக் கலையா? அன்னைக்குப் பொய்தான் சொன் னையா?"

"அன்று பொய் பேசினேனா அல்லது நிஜத்தைத்தான் சொன்னேனா, கோபத்தில் பேசினேன் என்பது மட்டும் நிச்சயமாகத் தெரிகிறது. ஆனால் உங்களுக்குக் கத்திக் குத்து. ஆஸ்பத்திரியில் அபாய நிலையில் இருக் கீங்கன்னு கேள்விப்பட்ட மறுகணமே உங் களை வெறுப்பது என்பது முடியாத காரியம் என்பதை உணர்ந்துகிட்டேன்! அப்பா அம்மா தடுத்ததையும் கேளாமல் அலறித் துடிச்சுகிட்டு ஓடி வந்தேன். நீங்க மயக் கத்தில் இருந்தீங்க."

"அண்ணா! இவளை வீட்டுக்குத் திருப்பி அனுப்பறது பெரும்பாடாகப் போயிட் டுது. நான் உன்னைக் கவனிப்பேனு இல்லே, இவளையா? கடைசியில் ஓர் அதட்டல் போட்டு கண்டிச் சுத்தான் அனுப்பினேன். நாத்தனாரா வரப் போற வதானேன்னு கண்டி ஷனு நடத்துக்கிட் டேன். அதிலே ஒ ன் னு ம் தப்பு இல் லே யே அண்ணா?"

"தப்புத் தான் கலை. இவ என்னை வெறுக்க முடிய லைன்னுதான் உணர்ந் ததாகச் சொன்னா. ஆனா என்னைக் காதலிப்ப தாகச் சொல்லவில்லையே!"

"ஏற்கெனவே புண்ணாகி யிருக்கிற என் மனசை மேலும் வதைக்காதீர்கள்" என்றாள் பிர மீளா. "நீங்க தப்பே செய்யலைன்னு நான் நினைக்கத் தயாராயில்லை. நீங்க செய்த தவறுக்கு நான் கோபமும் வருத்த

மும் அடைந்தேன். அது இன்னும் ஆறவில்லை என்பதும் உண்மைதான். நடந்ததையெல்லாம் மறந்து மன்னிக்கவிடவும் என் உள்ளம் இடம்தராது. ஆனால் இவ்வளவையும் ஒதுக்கிவிட்டு, என் பெற்றோரின் தடை உத்தரவையும் மீறி இப்போ என்னை இங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறதே, அதுதான் காதல் என்பதைப் புரிஞ்சுக்கிட்டிருக்கேன். கோபத்தில் உங்களை வெறுப்பதாக வெளிப்படையாகச் சொன்னாலும் காதல் வயப்பட்ட மனசு அதற்கு இடம் தராது. சதா உங்கள் நினைவாகவே இருக்கும் என்பதை உணர்ந்துகிட்டிருக்கேன்.''

''அண்ணா! உங்களுக்கிடையில் என்ன நடந்ததோ எனக்குத் தெரியாது. நடந்ததை மறக்க முடியாது என்றும் பிங்கி சொல்லிட்டா. ஆனால் அதை முடிஞ்சு போன அத்தியாயமாக நினைச்சு இனிப் புதிதாக ஒரு அத்தியாயத்தை உங்க வாழ்க்கை நாவலில் தொடங்கலாமே'' என்றாள் கலோரஜா.

''நான் ரெடி'' என்றான் சத்யா. ''நானும் தயார்'' என்றாள் பிரமீளா, அவன் கரங்களில் மலர் மழையாக இதழ்களைத் திரும்பத் திரும்பப் பதித்து.



''ஆனால் உன் பெற்றோர்? அவர்கள் இதற்குத் தயாராக இல்லையே?'' என்றான் சத்யா சந்தேகத்துடன்.

''அவர்களைப் பற்றி நமக்கென்ன? எதிர்ப்படக் கூடிய வாழ்க்கைப் பிரச்னைகளைச் சந்திப்பதில் நீங்கள் உறுதியாக இருக்கீங்களா? என்னிடம் மாறாக் காதலுடன் இனி

யேனும் உண்மையாக நடந்துக்குவீங்களா? என்பதுதான் முக்கியம். உங்களுக்கு நானும் எனக்கு நீங்களும் பக்கபலமாக இருக்கமுடியும் என்றால் பிறகு, என் பெற்றோரை என்ன, உலகத்தையே எதிர்த்து நிற்கலாமே'' என்றாள் பிரமீளா.

''அப்படியெல்லாம் இருப்பதாக நான் சொன்னால் அதை நீ நம்புவாயா பிங்கி? 'நம்பிக்கைத் துரோகி' என்று ஏற்கெனவே நிருபிச்சவனாயிற்றே நான்.''

''எனக்கு மறுபடியும் நம்பிக்கை ஏற்படும் விதமாகச் சொல்லுங்க'' என்றாள் அவள்.

''சொல்கிறேன் பிங்கி! இப்போ எனக்கு நெஞ்சிலும் தோளிலும் கத்திக் குத்து கிடைச்சுது இல்லையா? அது என் உயிரைக் குடிச்சிருக்கணும். ஆனா தெய்வாதீனமா உயிர் உறுப்புக்களைத் துளைக்கலே. நான் பிழைச்சுட்டேன். ஆனால் கத்தி காவு கொள்ளாமலும் விடலே. என் உயிர் போகவில்லையே யொழிய, என் மனசுக்குள் இருந்த விகாரங்களை அது கொன்று விட்டது!''

''இது போதுங்க எனக்கு'' என்றாள் பிரமீளா. ''இதோடு ஆனந்தை இனி சந்திக்கிறதில்லேன்னு முடிவு செய்துட்டீங்கன்னா அப்புறம் கவலையே இல்லே.''

''ஆனந்தை நிச்சயம் சந்திப்பேன் பிங்கி. அவனை விட மோசமானவர்களையும் சந்திப்பேன், பேசுவேன். ஆனந்தின் பேச்சிலர் அபார்ட்மெண்ட்டுக்குப் போவேன். நண்பனாகவே இருப்பேன். ஆனால் அவனால் நான் பாதிக்கப்பட மாட்டேன். அந்த அளவுக்கு எனக்கு இப்போ மனோதிடம் வந்துடுத்து. உடல்தான் பலவீனமடைந்திருக்கு'' என்று சத்யாவுக்கு மூச்சு வாங்கியது.

''பேசியது போதும். அமைதியா இருங்க. உடம்பைக் கவனிச்சுத் தேற்றிக்கிடுங்க.''

'' 'கவனிச்சுத் தேற்றிக்கிடுங்க'ன்னு மூணுவது மனுஷனுக்குச் சொல்வது போல் பேசறியே'' என்றாள் சுலோசனா. '' 'கவனிச்சுத் தேற்றி விடறேன்'னு பொறுப்பை நீ ஏற்றுக்க. எனக்கோ வீட்டிலே ஏகப்பட்ட வேலை. ஆஸ்பத்திரிக்கு வந்து அண்ணாவையும் கவனிச்சுக்கிட்டு வீட்டுக் காரியமும் பார்க்கிறதுன்னா ரொம்பக் கஷ்டம்.''

''ஆமாமாம்! உனக்கு வீட்டு வேலை ரொம்ப அதிகமாத்தான் இருக்கும். அம்மா வேறு இல்லை அல்லவா?'' என்றான் சத்யா.

''அண்ணா! நீ என்ன சொல்றே?'' என்று துயரை அடக்கிக் கொண்டு வியப்பை வெளிப்படுத்தினாள் சுலோசனா.

''அவதான் கத்திக் குத்துக்களோடு ரத்தம் சொட்டக் கிடந்த என்னைப் பார்த்த அதிர்ச்சியிலேயே செத்துப் போயிட்டாளே!''

''அண்ணா! அது உனக்குத் தெரியுமா! நீ அப்போ மயக்கமடைந்திருந்தாயே!''

''அப்போ நினைவிழந்துதான் கிடந்தேன். ஆனால் உணர்வு திரும்பிய பிறகு புரியாமல் போயிடுமா, சுலோ? எனக்கு அதிர்ச்சி அளிக்கக் கூடாது என்பதற்காக நீங்க உண்மையை மறைக்கப் பார்த்தாலும் தெரியாமல் இருந்துடுமா? அம்மா உயிரோடு இருந்தால் என்னைப் பார்க்க வராமல் இருப்பாளா? அதற்கு நீங்க ஏதேதோ காரணம் சொன்னாலும் நான் நம்ப வேண்டாமா? என்னிடம் எவ்வளவோ எதிர்பார்த்து அவ்வளவுக்கவ்வளவு ஏமாற்றம் அடைந்த அப்பா கூட வந்து ஆறுதலா இரண்டு வார்த்தை சொல்லிட்டுப் போயிட்டார். அம்மா வரலேன்னா என்ன அர்த்தம்? சுலோ! என்னிடம் அம்மாவுக்கு எவ்வளவு பாசம் பார்த்தியா? பெற்ற பாசம் கூட இல்லே, வளர்த்த பாசத்துக்காக ஒருத்தி உயிரையே விடுவதென்றால் எவ்வளவு உசத்தி?'' என்று சத்யா கூறி வரும்போதே, ''நாம் கொடுத்து வைக்கவில்லையே அண்ணா!'' என்று கூறி விசும்பத் தொடங்கினாள் சுலோசனா. 'ஓ'வென்று கதறி, புலம்பி அழ வேண்டும் போலிருந்தது அவளுக்கு. ஆனாலும் 'ஆஸ்பத்திரி, பிற நோயாளிகளுக்குத் தொந்தரவு' என்றெல்லாம் நினைவுகள் உடனிருந்து அவளைக் கட்டுப்படுத்தி வைத்தன.

சத்யாவிடமும் அடக்கிக் கொள்ள முடியாமல் ஒரு விம்மல் ஒலி எழுந்தது. பெரிது பெரிதாகக் கண்ணீர்த் துளிகள் இரண்டு கன்னங்களில் வழிந்து தலையணையை நனைத்தன.

''அழாதீங்க, ப்ளீஸ்! இப்போ நீங்க இருக்கிற நிலையில் மனசை வருத்திக்கொள்ளக் கூடாது'' என்றாள் பிரமீளா.

''பிங்கி! என் தாயாரை இழந்தேன். அதே சமயம் காதலியைத் திரும்பப் பெற்றேன். இழந்ததை நினைத்துத் துக்கப்படுவதா, கிடைத்ததை எண்ணி ஆனந்தப்படுவதா? என் உடல் கத்திக்குத்து பெற்றது. உள்ளம் அசுர குணங்களை இழந்தது. பெற்றதை எண்ணி வருந்துவதா? இழந்ததை நினைத்து மகிழ்வதா?''

கன்னத்தோடு கன்னம் இழைய, ''வருத்தங்களை அஸ்திவாரமாக்கி, மகிழ்ச்சியால் மாளிகை எழுப்பலாம். அந்த இல்லறம் என்றைக்கும் விரிசல் காணாமல் உறுதியாக இருக்கும்'' என்று அவன் காதருகே கூறினாள் பிரமீளா.

## அத்தியாயம் 36

அசுவினி என்டர்பிரைஸஸ் மானேஜிங் டைரக்டர் அறையில் வைத்தியலிங்கம் அமர்ந்திருந்தார். பஸ்ஸர் மணியை அழுத்தி ஒலி எழுப்பியதுடன், அது போதாதென்று

''எனக்குத் தெரியாமே என் பேரன் என் பல் செட்டை விளையாட எடுத்துட்டுப் போயிட்டான். நான்மட்டும் ஏமாந்தவனா என்ன?''

—பப் பிரியா



பொறுமை யற்றவராக, ''பியூன் பியூன்!'' என்று குரல் கொடுக்கவும் செய்தார்.

பியூன் ஒருவன் எட்டிப் பார்த்து, ''ஸார்?'' என்றான்.

''அருள்ராஜை உடனே அழைத்து வா!''

''அவர் ஆபீஸுக்கு வரலிங்களே? டிஸ்மிஸ் ஆன தினத்திலிருந்து வரதில்லே.''

''அவரை இந்த நிமிஷத்திலிருந்து மறுபடியும் அபாயிண்ட் பண்ணியாச்சு. ஏற்கெனவே தரப்பட்ட டிஸ்மிஸல் ஆர்டர் வாபஸ் பெறப்பட்டதாக ஒரு லெட்டர் டைப் பண்ணி கொண்டு வரச் சொல்லு. அப்புறம் கம்பெனி காரை அனுப்பி அவரை அழைச்சு வரச் சொல்லு.''

அருள்ராஜ் அப்போது அவர் கூறுவதைக் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார். ''கார் அனுப்ப அவசியமில்லே; நானே வந்துட்டேன். நீங்க கூப்பிட்டு அனுப்புவிங்கன்னு தெரியும்'' என்றார்.

வைத்தியலிங்கம் பியூனை அனுப்பி விட்டு அருள்ராஜிடம், ''ஆபீஸ் நிலவரமெல்லாம் எப்படி இருக்கு? விவரமாகச் சொல்லுங்க. ஐ ஆம் டேக்கிங் ஓவர் ஃப்ரம் டுடே'' என்றார்.

''ஸார்! உங்க ஒய்ஃப் இறந்து பதினைந்து நாள்கூட ஆகலே, அதுக்குள்...''

''அருள்! என் துக்கம் அடங்கற வரை ஆபீஸ் பிரச்னைகள் எல்லாம் காத்திருக்கணும்னு நான் எதிர்பார்க்க முடியுமா? நான் தாமதிக்கிற ஒவ்வொரு நாளும் நிறுவனத்துக்கு நஷ்டம் அதிகரிக்கிறது; வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ள ஃபாக்டரி தொழிலாளர் படும் சிரமமும் அதிகரிக்கிறது. இல்லையா?''

''ஆமாம் ஸார், ஆனால் அதற்காக நீங்க எங்கிட்ட கூட ரொம்ப பிஸினஸ் லைக்கா பேசணுங்கிறது இல்லே. சத்யா எப்படி இருக்கான்? போய்ப் பார்த்து வந்தீங்களா? கலா வீட்டு நிர்வாகத்தைச் சரியாக் கவனிக்கிறாளா? அதையெல்லாம் கொஞ்சம் மனசு விட்டுப் பேசுங்க. அப்புறம் ஆபீஸ் விஷயத்துக்கு வரலாம்.''

''தாங்க்யூ அருள்! என் மனப்பாரம் குறையக் கொஞ்சம் பேசினால்தான் நல்லது. உன்னைவிடச் சிறந்த நண்பன் எனக்கு யாரு?.. வளர்த்த பாசம், மனசு கேட்கலே — தினம் ஆஸ்பத்திரிக்குப் போய்ச் சத்யாவைப் பார்த்துட்டுத்தான் வரேன். உடம்பு தேறி வருது. அநேகமா இன்னிக்குச் சாயந்திரம் டிஸ்சார்ஜ் ஆகி வீட்டுக்கு வந்துவிடுவான். ஆனா ரெஸ்ட்லே இருக்கணும். பிளட் டிரான்ஸ்ஃபியூஷன் செய்தாங்க...''

''தெரியும்'' என்றார் அருள்ராஜ். ''அதுக்குப் பதிலா பிளட் பாங்குக்கு ரத்த தானம் பண்ணணும்னு டாக்டர் கேட்டுக்கிட்டப்போ நீபக் உடனே தன் ரத்தத்தைக் கொடுத்தான். தன் நண்பர்கள் சிலரையும் அழைச்சுப் போய் ரத்த தானம் பண்ண வைச்சான்.''

''இன்னும் இரண்டு நாளிலே சத்யா எழுந்து நடமாட ஆரம்பிச்சுடுவான்... கலா அம்மா இறந்த அன்றைக்குப் பிழியப் பிழிய அழுதா. மறுநாளிலேருந்து வீட்டுப் பொறுப்பு முழுக்க எடுத்துக்கிட்டா. என்னை



26 ஆண்டுகளுக்கு முன் ஓடிய டிராம் வண்டியைப் பற்றி இன்று சிலருக்குத் தெரியாது

- டிராம் வண்டி முதலில் ஓடியது ஜெர்மனியில் தான்.
- டிராம் வண்டியைக் கண்டு பிடித்தவர் ட்ராம் என்னும் ஜெர்மானியர்.
- கீழ்நாட்டிலே முதன் முதலாக எலெக்ட்ரிக் டிராம் ஓடியது சென்னையிலேதான்.
- 1877-ஆம் ஆண்டில் குதிரை கட்டி இழுத்த டிராம் சென்னையில் தண்டவாளத்தின் மீது ஓடியது.
- 1895-ஆம் ஆண்டு மே மாதந்தான் எலெக்ட்ரிக் டிராம் சென்னையில் ஓடத் தொடங்கியது.
- டிராம் கார்களை 1953-ம் வருடம் ஏப்ரல் மாதம் 12ம் தேதியுடன் நிறுத்தி விட்டார்கள்.
- மாதம் ஒன்றுக்குச் சுமார் 40 ஆயிரம் நஷ்டம் வந்ததால் டிராம் கம்பெனியை மூட வேண்டியதாயிற்று. — வசந்தன்.

அவளோட அம்மாவை விட நல்லாக் கவனிச்சுக்கறா.''

''உங்க மகமேலே இருக்கிற பாசத்தாலே பேசறீங்க. என்னதானிருந்தாலும் உங்க மனைவியைவிட கலா உங்களைக் கருத்தோடு கவனித்துக் கொள்ள முடியும்னு நான் நம்பலே.''

''அது உண்மைதான் அருள். உன்னிடம் மறைக்க முடியாது. தனத்துக்கு என்னிடம் எவ்வளவு பிரியம் தெரியுமா?...'' என்று பழைய நினைவுகளில் ஆழ்ந்து போனவராகத் தொடர்ந்தார் வைத்தியலிங்கம். ''ஆரம்பத்திலே தனக்குக் குழந்தை பிறப்பது சந்தேகம் தான் என்கிற நிலையிலே அவளுக்கு எவ்வளவு ஏமாற்றம்! இருந்தாலும் அவ நம்பிக்கை இழக்கலே. தினம் பூஜை பண்ணினா. அப்புறம் கடவுள் கிருபையாலே அவள் கருத்தரித்த போது அவள் அடைந்த ஆனந்தம் இருக்கே... அடிக்கடி என் கையை எடுத்துத் தன் அடிவயிற்றில் வைத்து, 'உங்க மக நகர்றா பாருங்க, உங்க மக உதைக்கிறா பாருங்க'ன்னு சொல்லுவா! உனக்குத் தெரியுமா அருள், முதல்லே ஆண் பிள்ளையை நாங்க தத்து எடுத்துக்கிட்டதாலே பிறக்கப் போவது பெண் குழந்தையாகத்தான் இருக்க வேண்டும் என்று நாங்க விரும்பிப் பிரார்த்தித்தோம். ஏன்னு எங்களையும் அறியாமல் சொந்த மகளிடம் அதிகமான பாசம் வைச்சுடலாம் இல்லையா? அவ்வளவு தூரம் சத்யாவுக்காக நாங்க கவலைப்பட்டதற்கு இன்னிக்கு நல்லாப் பழி வாங்கிட்டான்!''

''அதுக்காக அவன் தண்டனையும் அடைஞ்சுட்டான், ஸார்! இனிமே சரியாயிடுவான் பாருங்க.''

''இதிலே யாருக்குத் தண்டனை? யாருக்குத் தண்டனை இல்லே? கத்திக் குத்துப் பட்டது அவனுக்குத் தண்டனைன்னு அந்த அதிர்ச்சி தாங்காமல் என் மடியில் விழுந்து செத்துட்டாளே தனம், அவளுக்கு ஏன் அந்தத் தண்டனை?''

''அதைத் தண்டனைன்னு ஏன் நினைக்கிறீங்க? அது அவங்களோட பிரார்த்தனை. அது நிறைவேறிடுச்சு.''

''நிஜம்தான். எனக்கு ஹார்ட் அட்டாக் வந்ததிலிருந்து என்னை ஆபீஸுக்குப் போகக் கூடாதுன்னு தடுத்துட்டா. என்னால் ரொம்ப 'டென்ஷன்' தாங்க முடியாதுன்னு அவளுக்குப் பயம். தான் சுமங்கலியா சாகணும். என் மடியிலே தலை வைச்சுக் கடைசி மூச்சு விடணும்கிறது ஒண்ணுதான் சமீபத்திலே அவ பிரார்த்தனையா இருந்தது. அதுவும் நிறைவேறிப் போச்சு. இனிமே என்னை வீட்டோடு கட்டிப்போட்டு வைக்கிற வாக்குறுதி ஏதும் இல்லே. ஆபீஸுக்கு வந்துட்டேன். அது சரி, இங்கே என்ன நடந்தது? அதை விவரமா சொல்லு. சத்யாவைக் குத்திய வனைப் போலீஸில் பிடிச்சுக்கிட்டுப் போயிட்டாங்களாமே?''

''ஆமாம் ஸார்! சத்யா அன்றைக்கு ஆபீஸை விட்டு வெளியே வரப்போ தன் நிலையில் இல்லே. கொஞ்சம் அதிகமாகவே மது அருந்தியிருக்கான். அதுக்கு இரண்டு நாள் முன்தான் உங்க பேரிலே தொழிலாளர் விரோதின்னு பழியைப் போட்டதோடு என்னையும் பணத்தை மோசடி பண்ணினதா பொய்க் குற்றம் சுமத்தி வேலையை விட்டு அனுப்பினான். அவன் ஏமாற்று வார்த்தைகளைத் தொழிலாளர் நம்பலே. அவன் காரைச் சூழ்ந்துக்கிட்டு 'ஒழிக' கோஷம் போட்டிருக்காங்க. மிதப்பிலே இருந்த சத்யா, தொழிலாளர் ஏமாறலேன்னு தெரிஞ்சு கோபத்தோடு இறங்கி ஏதோ சொல்லியிருக்கான். ராஜசேகர் என்கிறவன் சத்யாவைப் பற்றித் தரக்குறைவாப் பேச, சத்யா அவனைத் தாறு மாறுத் திட்டியபடி ஷூவைக் கழற்றியிருக்கான். தொழிலாளர்களுக்குக் கொதிப்பு ஏற்பட்டுப் போச்சு. செருப்படி பட்ட ராஜசேகர் அடக்க மாட்டாத ஆத்திரத்துடன் பிச்சுவாவை எடுத்துக் குத்திட்டான்... அடுத்த கணம் அங்கே ஆத்திரம் அடங்கி எல்லாரும் பிரமித்து நின்னுட்டாங்க...''

''அருள்! அத்தனை கத்திக் குத்தையும் தாங்கிக்கிட்டு போதை வேறு ஏறிய நிலையிலே சத்யா தானே காரை ஓட்டிக்கிட்டு வீடு வந்து சேர்ந்தானே, அதுதான் பெரிய அதிசயம்! எத்தனை வேதனைப் பட்டிருப்பானோ... 'அம்மா! என்னைக் காப்பாத்தும்மா. அப்பா என்னைக் காப்பாத்த மாட்டார்; நீயாவது காப்பாத்தும்மா'ன்னு கேட்டுக்கிட்டுத் தள்ளாடித் தள்ளாடி வந்தான். அந்த ரத்த வெள்ளத்தைப் பார்த்த அதிர்ச்சியிலேயே என் மனைவி செத்துட்டா! அருள்! நான் மகாத்மா காந்தியில்லே. என்னால் ராஜசேகரை மன்னிக்க முடியாது. என் மகனைக் குத்தியவனுக்கு, என் மனைவியைக் கொன்றவனுக்கு சட்டரீதியா கிடைக்க வேண்டிய தண்டனை கிடைக்கட்டும். அதோடு அவனை உடனே நாம் டிஸ்மிஸ் பண்ணிடணும். கணக்குப் பார்த்து அவனுக்குக் கிடைக்க வேண்டிய பணத்தைக் கொடுத்துக் கையெழுத்து வாங்க ஏற்பாடு செய்யுங்க.''

''ஆகட்டும் ஸார்.''

''அப்புறம்? வேறென்ன? லெட் அஸ் டாக் பிஸினஸ்! பயப்படாமே தயங்காம மனசு விட்டு இங்குள்ள நிலவரங்களைச் சொல்லுங்க.''

''சொல்றேன் ஸார். ஆனா ஒண்ணு மட்டும் கேட்டுக்கறேன். டோண்ட் கெட் எக்ஸைட்டட். உங்களுக்கு ஹார்ட் கண்டிஷன் நீடிக்கிறது என்கிறதை நீங்க மறக்கவே கூடாது! எதுவானாலும் சரி, டேக் இட் ஈஸி'' என்றார் அருள்ராஜ். (தொடரும்)

---

### ராமர் கட்சியா? பரதன் கட்சியா?

**துளசிதாஸரின் கற்பனையான ஓர் உரையாடல் இது:**

ஒருவர்: ஏனய்யா துளசிதாசரே! அற்புதமாக உமது காப்பியத்தில் வர்ணித்திருக்கிறீரே? ராமரை நீர் பார்த்ததுண்டா?

துளசி: ஓ! பார்த்திருக்கிறேனே! சொல்லப் போனால் அவருடன் விளையாடவும் செய்திருக்கிறேன். ஒரு சமயம் விளையாட்டில் இரண்டு கட்சிகள் ஏற்பட்டன. அதில் ஒரு கட்சியின் தலைவன் ராமன். மற்றொரு கட்சியின் தலைவன் பரதன்.

ஒருவர்: அப்படியா? எனில், நீர் ராமர் கட்சியில்தான் சேர்ந்திருப்பீர்! அப்போதுதானே வெற்றி பெற முடியும்.

துளசி: இல்லே. நான் பரதன் கட்சியில்தான் சேர்ந்தேன்!

ஒருவர்: ஏன், பரதன் மீது உமக்கு அன்பு அதிகமோ?

துளசி: ராமர் கட்சியில் சேர்ந்து விளையாடினால் அவரது முகத்தைப் பார்க்க முடியாது. ஆனால் பரதனோடு சேர்ந்து எதிர்த் தரப்பில் விளையாடினால் எப்போதும் பகவானைத் தரிசிக்கலாம் அல்லவா?

ஒருவர்: அது சரி; ராமர் தாமே வெற்றி பெற்றார்?

துளசி: இல்லே, பரதனுக்குத்தான் வெற்றி கிடைத்தது.

ஒருவர்: அது எப்படி ?

துளசி: பரதன் மகா பக்தன். அவன் தன் பக்தியால் ராமரைப் பணிந்து வரம் பெற்று விட்டான். பிறகு பகவான் எப்படி வெற்றி பெற முடியும்? பக்தனுக்குத்தானே வெற்றி!

சுவாமி ஆத்மானந்தரின் ஆங்கில உரை.

- குன்றக்குடி கலிய பெருமாள்.



# ராஜாஜி
## வாழ்க்கை வரலாறு
### ராஜ்மோகன் காந்தி

புத்தாண்டு தினத்துக்கு முதல் நாள் மாலை ஆண்களும் பெண்களுமாக 3,00,000 மக்கள் ரவி நதிக்கரையில் கூடி சுதந்திர இந்தியாவின் மூவர்ணக் கொடி ஏற்றப்படுவதைக் கண்டார்கள். இவர்களில் ஸி. ஆரின் மகன் நரசிம்மனும் ஒருவர். அவருக்கு அப்போது இருபது வயது. திருச்செங்கோடு பிரதிநிதியாக காங்கிரஸ் மகாநாட்டில் கலந்துகொள்ள வந்திருந்தார்.

காங்கிரஸ் தாக்குதலைத் தொடங்க வேண்டும். ஆனால் அது எப்படி நடக்கப் போகிறது? மிகச் சக்தி வாய்ந்ததாக இருக்கும் அரசிடம் நாடு தழுவிய முறையில் மக்கள் விசுவாசம் இழக்கும்படி செய்வது எப்படி? அந்த எழுச்சி அஹிம்சா மார்க்கத்தில் மட்டுமே செல்லுமாறு கட்டுபடுத்துவது எவ்வாறு?

புதிய காங்கிரஸ் காரியக் கமிட்டி இந்தக் கேள்விகளை ஜனவரி 2ம் தேதி ஆராய்ந்தது. இக்கமிட்டியில் ஸி. ஆரும் படேலும் அங்கம் வகித்தனர். தாங்களாகவே விரும்பி ஆறு ஆண்டுகள் ஒதுங்கி யிருந்த பிறகு இப்போது காந்தியவாதிகள் மறுபடியும் முன்னணிக்கு வந்திருந்தனர். ஞாயிற்றுக் கிழமை ஜனவரி 26ம் தேதிக்குச் சுதந்திர தினம் எனப் பெயர் சூட்டப்பட்டது. அன்று இந்திய மக்கள் ஒவ்வொருவரும் ஒரு சத்தியப் பிரமாணம் மேற்கொள்ளுமாறு கோரப் பட்டனர். அந்நிய ஆட்சிக்குக் கீழ்ப்படிவது மனிதனுக்கும் கடவுளுக்கும் எதிராகச் செய்யப்படும் மாபெரும் குற்றம் என்பதாக அந்த சத்தியப் பிரமாணம் குறிப்பிட்டது.

இருப்பினும் புரட்சிக்கான அறைகூவலுடன் புரட்சிக்கான திட்டம் ஏதும் உருவாகவில்லை. மக்களுக்குப் புரட்சியில் இருந்த ஈடுபாடு எவ்வளவு என்பதையும் அறிய முடியவில்லை. இதைக் கணிக்கக் காந்தியும் காரியக் கமிட்டியினரும் ஜனவரி 26ம் தேதியை எதிர்நோக்கியிருந்தனர்.

ஸி. ஆர். நம்பிக்கையுடன் இருந்தார். தெற்கே செல்லும் போது வழியில் வார்தாவில் பேசுகையில், ''ஜனவரி 26 ஒரு மகத்தான நாளாக விளங்கும். அன்று இந்தியா பிரிட்டனை விவாகரத்து செய்வதாக அறிவிக்கும்'' என்றார்.

வார்தாவில் இருக்கும்போது அவர் இரு மாபெரும் பாவங்களைக் கண்டித்தார். ஒன்று மது விற்பனை என்கிற அரசு செய்யும் பாபம். அது மக்களை மாக்களாக்குகிறது. மற்றொன்று தீண்டாமை. மக்கள் செய்யும் இந்தப் பாபம் சிலர் மிருகங்களைவிடக் கேவலமாக நடத்தப்படக் காரணமாகிறது.

மக்களின் எழுச்சியைக் கணிக்க வேண்டிய தினத்தன்று ஸி. ஆர். மதுரையில் இருந்தார். அங்கே ஸி. ஆரை விசுவாசத்துடன் பின்பற்றும் ஏ. வைத்தியநாத அய்யர் இருந்தார். அத்தினத்தில் மாபெரும் உற்சாகம் நிலவியது என்று ஹிந்து பத்திரிகை எழுதியது.

காந்தியின் அறிவுரைப்படி தேசத்தில் எங்குமே சொற்பொழிவுகள் நிகழவில்லை. எங்கு பார்த்தாலும் கொடியேற்றம் நடந்தது. சத்தியப் பிரமாணம் வாசிக்கப் பட்டது. அதனை ஒப்புக் கொள்வதாக இருந்தால் கரங்களை உயர்த்துமாறு குழுமியிருந்த மக்கள்



படேல், ராஜாஜி

கோரப்பட்டனர். ஞாயிற்றுக்கிழமை காலை எந்த இடத்தை நோக்கினாலும், இது என்ன கரங்களின் காடோ என்று எண்ணும்படியிருந்தது.

ஆக, மக்களின் செய்தி சட்டசபை அங்கத்தினர்களுக்குப் புரிய வந்தது. சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் சிலர் இன்னும் தயங்கினாலும் மத்தியில் முப்பது பேர் உள்பட மொத்தம் 172 சட்டசபை அங்கத்தினர்கள் பிப்ரவரிக்குள் ராஜினாமா செய்தனர்.

தெற்கே சென்றவிடமெல்லாம் ஸி. ஆரைக் காணப் பெரும் கூட்டம் திரண்டது. அவர் அறிவுரை வழங்கினார்:

> ''ஆண்டவன் கண்களுக்குத் தவறு என்று தோன்றக் கூடிய எதையும் செய்யாதீர்கள். ஆனால் அநீதியை எதிர்த்துப் போராடுங்கள். எதிர்ப்பது எனில் எதிராளியின் தலையைக் கனமான தடிகொண்டு தாக்குவது அல்ல; நீங்கள் எதிர்ப்பு தெரிவிக்கிறீர்கள் என்பதற்காக எதிராளி விதிக்கும் தண்டனைகளை ஏற்று, சகித்துக் கொள்வதுதான்!''

அவர் பரிகசித்தார்:

> ''சுதந்திரம் என்பது எங்களுக்குத்தான் லாயக்கு. உங்களுக்கு அல்ல என்று பிரிட்டி



மதுரை

ஏ. வைத்தியநாத அய்யர்

ஷார் கூறுகிறார்கள். சுயராஜ்யம் வேண்டும் என்று நீங்கள் கேட்டால் நீங்கள் பொல்லாதவர்களாகிறீர்கள். உங்களைத் திருத்தி நல்வழிப்படுத்த உங்களைச் சிறையில் வைக்க வேண்டும் என்கின்றனர். இதுதான் அடிப்படையான விஷயம். இதை இவ்வாறு நான் எளிய சொற்களில் தெளிவாக்கும் போது நீங்கள் இதைக் கேட்டுச் சிரிக்கிறீர்கள். ஆட்சியாளர் அளிக்கும் தண்டனையை நம்மில் ஆயிரக் கணக்கானவர் சந்தோஷமாக ஏற்றால் இப்போது நீங்கள் இங்கு சிரிப்பது போலவே அகில உலகமும் பிரிட்டிஷ் அரசைப் பார்த்துச் சிரிக்கும். இந்தச் சிரிப்பும் நாம் அனுபவிக்கும் துன்பமும் மின்சாரம் போல் சக்தி வாய்ந்தவை.''

அவர் சவால் விட்டார்:

''நமது அன்புக்கு மிகவும் பாத்திரமானவற்றையெல்லாம் துறந்து விட்டு மீண்டும் ஒரு மாபெரும் முயற்சியில் இறங்க வேண்டிய தருணம் வந்து விட்டது.''

''நாம் எல்லோரும் சாக வேண்டியது தான், ஆனால் சாவதற்கு முன் சுதந்திரம் பெற்று விடுவோம். போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டிய நிலைக்கு நமது குழந்தைகளை நாம் ஆளாக்க வேண்டாம்'' என்று அவர் திருப்பூரில் சொன்னார்.

''நமது வாழ்நாளிலேயே நாம் சுதந்திரத்தைக் கண்டு விடுவோம்'' என்று அவர் தீர்க்க தரிசனத்துடன் பிப்ரவரி மாத ஆரம்பத்தில் சேலத்தில் கூறினார்.

இருள் சூழ்ந்திருப்பதை உணர்ந்தாலும் ஸி. ஆர். விடிகிற நேரத்தையும் எதிர்பார்த்திருந்தார். ஆனால் சில காங்கிரஸ்காரர்கள், அவர்கள் முன் எந்த ஒரு செயல் திட்டமும் இல்லையாதலால் பரபரத்துக் கொண்டிருந்தார்கள். காந்தி தமது நேரத்தை வீணடித்துக் கொண்டிருக்கவில்லை. செயல் திட்டம் ஒன்று பற்றி அவர் தீவிரமாகச் சிந்தித்துக் கொண்டுதான் இருந்தார்.

டாக்டர்: 'உம்'னு இருக்காம எப்பவுமே சிரிச்சபடியே இருங்க!

நோயாளி: வேணும் சார்! ஒரு பொண்ணைப் பார்த்துச் சிரிச்சதுக்காகத்தான் இவ்வளவு கட்டுப் போட்டிருக்கேங்க!...




— ராம்

அத்திட்டம் சவாலாகவும் அமைய வேண்டும், அதே நேரத்தில் தியாகத்தைக் கோருவதாகவும் இருக்க வேண்டும். இல்லையெனில் இளைஞர்களை அது கவராது. வாய் திறவாமல் தீவிர ஈடுபாட்டுடன் செயலில் இறங்கும் புனிதமான வாலிபக் கூட்டம் வன்முறைக்கு ஈர்க்கப்பட்டு விடும். அத்திட்டம் அஹிம்சா மார்க்கத்தில் அமைந்திருக்க வேண்டும். அந்தப் பாதையில்தான் செல்வது என காந்தி சத்தியப் பிரமாணம் மேற்கொண்டிருந்தார். சிக்கலற்றதாகவும் இருக்க வேண்டும். அப்படியானால்தான் சுதந்திரத்தை விரும்பும் இந்தியர்கள் எங்கிருந்தாலும் அதனை ஏற்று இறையருளுடன் செயல்படலாம்.

திடீரென்று அவருக்கு யோசனை உதயமாயிற்று உப்பு வரியை எதிர்ப்பது? உப்பு உற்பத்திக்கும் விற்பனைக்கும் வரி போடுவதன் மூலம் அரசு பசியால் வாடும் கோடானு கோடி மக்களை - நோயுற்றவர்கள், அங்கஹீனர்கள், நாதியற்றவர்கள் போன்ற அனைவரையும் துன்புறுத்துகிறது. மக்கள் தாங்களாகவே தங்களுக்குத் தேவையான உப்பைத் தயாரித்துக் கொண்டு அதன் மூலம் அரசுக்கு மனிதத் தன்மையற்ற அந்த வரி கிட்டாமல் செய்து விட வேண்டும்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி சபர்மதியில் பிப்ரவரி மத்தியில் கூடுவதாக இருந்தது. காந்தி தமது சகாக்களுக்கு உப்பு விஷயம் பற்றிக் கோடி காட்டினார். பிப்ரவரி 15ம் தேதி ஆமதாபாத்தில் ஒரு பொதுக் கூட்டத்தில் ஸி. ஆர். பேசும்போது, ''அஹிம்சைப் போருக்குத் தளபதி அறைகூவல் விடுப்பார், அதனை எதிர்பாருங்கள்!'' என்று தேசபக்தர்களுக்குச் சொன்னார்.

ஜவாஹர்லால் போன்ற சிலருக்கு மகாத்மா உப்பைத் தேர்ந்தெடுத்தது புரியாத குழப்பமாக இருந்தது. வேறு பலர் பூரண சுயராஜ்யம் என்ற இலட்சியத்திலிருந்து கவனத்தைத் திருப்புவதாகக் காந்தியைக் குறை கூறினார்கள். உப்பு வரியால் அரசுக்கு மொத்தத்தில் கிடைக்கும் வருவாய் மிகச் சொற்பமானது என்று எடுத்துக் காட்டி காந்தியின் திட்டத்தைப் பரிகசித்தனர். ஆனால் ஸி. ஆருக்கு எந்த விதமான சந்தேகமும் இருக்கவில்லை. அவர் இதயம் காந்தியை நம்பியது. அவரது அறிவு, காந்தியை நம்பாதவர்களுக்கு காந்தியின் திட்டத்தை விளக்கி விரித்துரைக்க முற்பட்டது. ஷோலாப்பூரில் ஒரு பெருங்கூட்டத்தில் அவர் பேசினார்:

'' 'இந்த மனுஷன் கதர் உற்பத்தி செய்தால் சுயராஜ்யம் வரும் என்றார்; இப்போது உப்பும் தயாரிக்க வேண்டும் என்கிறாரே, இது என்ன வேடிக்கை' என்று நீங்கள் கேட்கலாம். உப்பு வாங்குவது எனில் இந்த அரசை ஒப்புக்கொண்டு அதற்கு விசுவாசத்துடன் நடந்து கொள்வதாகும். உப்பு தயாரிப்பது எனில் அரசிடம் விசுவாசத்துடன் இருக்க மறுப்பதாகும்.''

(தொடரும்)

தமிழாக்கம்: இ. ராஜேந்திரன்






Century Rayon

சிங்கப்பூர் மலேஷியா நாடுகளில் அங்கேயே தங்க உத்தரவு கொடுக்கும் 'விசா' கிடைப்பது ரொம்பக் கஷ்டமாகத்தான் இருக்கிறது. அதுவும் சிங்கப்பூர் சின்ன நாடாக இருந்து ஏற்கனவே அங்கு மக்கள் தொகை ஏராளமாய் இருப்பதால், மேற்கொண்டு வெளி நாட்டிலிருந்து வழிந்து வரும் ஜனத் தொகையை எப்படியெல்லாமோ தடுக்க அரசாங்கம் விடாமல் முயற்சி எடுத்துக் கொள்கிறது.

எங்களுக்கு வேண்டிய பெண், சமீபத்தில் இந்தியாவில் கல்யாணமாகி அங்கு சென்றிருக்கிறாள். அவளும் டாக்டர், அவள் கணவனும் டாக்டர். அவள் கணவன் அந்நாட்டுப் பிரஜை. இவள் அங்கு போய் மாதங்கள்

அருகில் இருக்கும் மலேஷியா நாட்டுப் பெண்களை வரவழைத்தால் கூட இந்தச் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டே ஆக வேண்டும்.

ஆள் வரவழைக்க விரும்புபவர் முதலில் அரசாங்கத்திடம் 10,000 வெள்ளிகளை (கடந்த சில மாதங்களாய், பலர் முறையிட்டதைத் தொடர்ந்து 5,000மாக குறைத்திருக்கிறார்கள்.) டெபாசிட் செய்ய வேண்டும். வக்கீல் மூலம் இன்ன பெண்ணை, இன்ன நாட்டி



# மனம் கவர்ந்த மலேஷியா-13

## சிவசங்கரி



✖ திருவிழா ஊர்வலத்தில் ஒற்றைச் சக்கர சைக்கிள் சவாரி

ஆறு ஆகியும் இன்னும் நிரந்தர விசா கிடைக்கவில்லை. மாதா மாதம் விசா ஆபீசுக்குச் சென்று டூரிஸ்ட் விசாவைப் புதுப்பித்து வருகிறாள். கணவன், அவனின் குடும்பத்தார் அனைவரும் சிங்கப்பூர் பிரஜைகளாக இருப்பதால் அவளுக்குச் சீக்கிரமே பிரஜா உரிமை கிடைத்து விடும் என்றாலும், அது வரை தொந்தரவுதான். இதில் என்ன வேடிக்கை என்றால் நிரந்தர விசா கிடைக்கும் வரை இவள் மாதம் ஒருமுறை விசா புதுப்பிக்கும் போது 'நான் கர்ப்பமாக இல்லை' என்றும் எழுத்தில் எழுதிக் கொடுக்க வேண்டுமாம்! பிரஜை இல்லாத பெண், அங்கு கர்ப்பமாகி, பிரசவித்து இன்னொரு உயிரை அந்நாட்டு ஜனத்தொகையோடு சேர்க்காமல் இருக்க இத்தனை முஸ்தீப்புகள்.

சிங்கப்பூரில் ஒருவர் வெளிநாட்டிலிருந்து வீட்டு வேலைக்கு ஆள் அழைத்து வரவேண்டுமென்றால் பல விதிமுறைகள் உள்ளன.

லிருந்து, இன்ன காரணத்துக்காக வரவழைக்கிறேன் என்று ஸ்டாம்பிட்ட பேப்பர்களைப் பூர்த்தி செய்து தந்த பின்னரே அரசாங்கம் அப்பெண்ணுக்கு வேலைபார்க்கத் தகுதி உள்ள விசாவை வழங்குகிறது.

எதற்காகப் பத்தாயிரம் டாலர்கள்—என்று வியக்கிறீர்களா?

சொல்கிறேன்.

அந்தப் பெண் கர்ப்பமாகாமல் இருக்க உத்தரவாதமாகக் கொடுப்பதுதான் இந்த டெபாசிட் பணம்! தப்பித் தவறி சிங்கப்பூரில் இருக்கும் காலத்தில் அந்தப் பெண் கர்ப்பமாகி விட்டால் பணம் கோவிந்தா. ஒரு பெண், கர்ப்பமா, இல்லையா என்பது அரசாங்கத்துக்கு எப்படித் தெரியும் என்று நாம் கேட்கலாம். சிங்கப்பூர் அரசாங்கம் ரொம்ப விழிப்புடன் இருக்கிறது. மூன்று மாதங்களுக்கு ஒருமுறை இப்படி வேலைக்கு வைத்துக் கொள்ளும் பெண்களை, அவர்களின் எஜமானிகள் டாக்டரிடம் அழைத்துச் சென்று



⌘ மலேஷியாவில் தென்கோடியில் உள்ள 'தேசாரு' என்ற புகழ் பெற்ற உல்லாசக் கடற்கரை நகரம்

இவள் கர்ப்பமாக இல்லை — என்ற சர்டிபி கேட்டை வாங்கி அரசாங்கத்திடம் சமர்ப் பிக்க வேண்டும்!

ஜன நெருக்கம் அதிகமாயுள்ள தன்சின்ன நாட்டை எத்தனை ஜாக்கிரதையுடன் சிங்கப்பூர் அரசாங்கம் கட்டிக் காக்கிறது பார்த்தீர்களா?

இதனால் வெளிநாட்டு பெண்ணை வேலைக்கு வைத்துக் கொள்ளும் ஒவ்வொரு எஜமானி யும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு வேலைக்காரப் பெண்ணைக் கண்காணிக்கிறார்.

சனிக்கிழமை இரவு பாய் பிரண்டோடு அவள் வெளியே போய் விட்டால் இவர்க ளுக்கு பயம் பிடித்துக்கொள்கிறது.

பின்னே? உணர்ச்சி வேகத்தில் அவர்கள் ஏடாகூடமாக நடந்து கொண்டு விளைவு விப ரீதமாகி விட்டால், பல ஆயிரம் வெள்ளி களுக்கு அல்லவா டாட்டா காட்ட வேண்டி வரும்!

வெளிநாட்டிலிருந்து வேலைக்கு வரும் ஆண் களுக்கு இத்தனை கெடுபிடி இல்லை, பெண் களுக்குதான்!

சிங்கப்பூரின் விதிமுறைகளுக்குக் கட்டுப் பட்டு ஹேமாவும் ஒரு மலேஷிய நாட்டு பெண்ணை வீட்டு வேலைக்கு உதவியாய் வைத் துக் கொண்டிருக்கிறாள்.

ரோஸலின் என்கிற அந்தப் பெண்ணுக்கு இருபது வயசிருக்கும். அவளுக்கென்று தனி பெட்ரூம், அட்டாச்ட் பாத் ரூமுடன்.

''ப்ளீஸ் ரோஸா தண்ணீர் கொண்டு வா''

''ரோஸா அடுப்பில் இருக்கும் சாதத்தைக் கவனி, ப்ளீஸ்'', ''வாசலில் யார் என்று ப்ளீஸ் பார்க்க முடியுமா, ரோஸா?'' என்று எதற்கெடுத்தாலும் 'ப்ளீஸ்' போட்டு, ரோஸாவை மரியாதையுடனும், அன்புடனும் ஹேமா நடத்துகிறாள். இப்படி நடத்தவில்லை என்றால் ஒருநாள் கூட தங்க மாட்டார்கள்.

ஞாயிறு ரோஸாவுக்கு விடுமுறை நாள்.

அவளின் சொந்த ஊர், ஜோஹோர் பாரு அருகில் — சிங்கப்பூரிலிருந்து ஏழு மைல் தள்ளி உள்ள மலேஷியா பகுதியில் — இருக்கிறது. விடுமுறை நாள் அன்று ஊருக்குப் போனாலும் போவாள். இல்லை என்றால் நண்பனுடன் சினிமா, கடை என்று சுற்றிவிட்டு வந்தாலும் வருவாள்.

வீட்டுக்குவரும்போன்களில் பாதிக்கு மேல் ரோஸாவுக்குத்தான். சிநேகிதர்கள், உறவுக் 'காரர்கள் கூப்பிட்டுப் பேசுகிறார்கள்.

மாலையில் வேலைகள் முடிந்த பின்னர் மாடி யில் இருக்கும் டி.வி.யைப் போட்டு விட்டு அக் காடா என்று ரோஸலின் உட்கார்ந்து விடு கிறாள்.

ரோஸா பாடு தேவலைதான்!

''இவளால் உனக்குப் பொறுப்பு அதிகம் தானே?'' என்றேன். ரோஸா பற்றியும், சிங்கப்பூரின் விதிகள் பற்றியும் அறிந்தவுடன்.

''பொறுப்புதான் — ஆனால் இவ்வளவு பெரிய வீட்டை, இரண்டு குழந்தைகளைப் பரா மரிக்க உதவி வேண்டி இருக்கிறதே! சிங்கப்பூர் பெண்கள் இவளைப் போல் ப்தவிசாய் வேலை



⌘ மலேஷிய உடையில் பெண்

செய்வதில்லை, குழந்தைகளை நம்பி விட முடிவ தில்லை. ரோஸாவிடம் திருட்டு, பொய் ஒன் றும் கிடையாது. வீட்டை அப்படியே திறந்து போட்டு விட்டுப்போகிறேன். கவலை இல்லை: இவைகளை எல்லாம் யோசனை பண்ணிய பிறகே, அவளுடைய பொறுப்பையும் ஏற்க முன் வந்தேன்.''

அன்று இரவு உணவு உட்கொண்ட பிறகு வீட்டில் இருந்த புகைப்படங்களைப் பார்த்த வண்ணம் மேற்கூறிய விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தோம்.

அப்போது, ஆல்பத்தில் இருந்தசில குறிப் பிட்ட புகைப்படங்கள் என்னைக் கவர்ந்தன.

சமுத்திரத்தில் ஒரு படகு போகிறது. அதி லிருந்து வால் மாதிரி ஒருகயிறு ஆகாசத்துக்குச் செல்கிறது. கயிற்றின் முடிவில், அந்தரத்தில் பாராசூட் உதவியுடன் தொங்கிக் கொண் டிருந்தான் பாலு. இதேபோல ஹேமாவும் இன்னொரு படத்தில் ஆகாய ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்தாள்.

''என்ன ஹேமா இது?'' —

ஹேமா விவரித்தாள்.

படாலா என்ற இடத்துக்குச் சென்ற வருஷம் விடுமுறைக்காகச் சென்றிருந்தார்களாம். அப்போது எடுத்த படங்களாம்.

இந்த விளையாட்டுக்கு பாரா செய்லிங்— *Para sailing* — என்று பெயர்.

''முதலில் நம்மிடம் ஒரு பாராசூட்டைக் கொடுத்து கட்டிக் கொள்ளச்சொல்வார்கள். நம்மை நீளமான கயிறு நுனியில் கட்டி, மறு நுனியை ஒரு விசைப் படகில் கட்டி விடுவார்கள். விசைப் படகு சமுத்திரத்தில் வேகமாய்ப் போக ஆரம்பிக்கும். படகின் வேகம் அதிகரிக்க அதிகரிக்கப் பாராச் சூட்டுள்காற்று புகுந்து கொண்டு, நம்மைக் கடலுக்கு இரு நூறு அடிகள் மேலே தூக்கி விட்டு விடும். கால் மணி நேரம் படகு சமுத்திரத்தில் சீறி ஓடி ஆடும். அப்போது நாமும் ஆகாயத்தில் மிதந்து பறக்கலாம். ஒரு பறவையாகவே நாம் மாறி விடுவோம் தெரியுமா? அப்புறம் வேகத்தை மெள்ள மெள்ளப் படகு குறைத்தால், நாமும் மெதுவாய் உயரத்திலிருந்து கீழே இறங்கி விடுவோம். நம் விருப்பப்படி தண்ணீரிலும் இறங்கலாம், மணலிலும் இறங்கலாம்.''

ஹேமாவின் பேச்சு எனக்குப் பிரமிப்பைத் தந்தது. ஆஹா! எத்தனை இன்ப அனுபவம்!

மறுநாள், ஹார்பருக்குச் சென்று சிங்கப்பூரைக்கடல் வழியே சுற்றிப் பார்ப்பது என்று தீர்மானித்தபடி, காலை பதினொரு மணி அளவில் எங்களை பி.எஸ்.ஏ. கட்டிடத்தில் ஹேமா கொண்டு விட்டாள். கடல் சுற்றுலாவை முடித்த பின்பு பாலுவுக்குப் போன் பண்ணினால் அவன் ஆபீஸிலிருந்து வீட்டுக்குத் திரும்பும் போது எங்களை 'பிக் அப்' செய்து கொள்வான் என்பது ஏற்பாடு.

பி.எஸ்.ஏ. கட்டிடத்தைப் — போர்ட் சிங்கப்பூர் அதாரிடி கட்டிடத்தை—புதுசாய்க் கட்டிக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் முழு கட்டிடமும் தயாராகவில்லை.

நாங்கள் செல்ல இருந்த துறைமுகப் பயணத்துக்கு நேரம் இருந்ததால் பி.எஸ்.ஏ. கட்டிடத்தை ஒரு சுற்று சுற்றினோம். கால் வலித்து விட்டது. அத்தனை பெரிசு—

உயரமான எஸ்கலேட்டர்களை ஒவ்வொரு மாடிக்கும் பொருத்தி இருக்கிறார்கள்.

இரண்டாம் மாடியில் பல கடைகள்.

கூட்டம் அதிகம் இல்லாததால் ஒரு கடைக்காரரிடம் பேச்சுக் கொடுத்தோம். கடை வாடகை மாசம் 1,300 வெள்ளியாம், பீரோக்கள், அலமாரிகள் முதலியவைகளை அமைக்க அவருக்கு 8000 வெள்ளிகள் ஆயினவாம். இத்தனை செலவு பண்ணிவிட்டு இப்போது ஈ ஓட்டிக் கொண்டு இருக்கிறாரே என்று எனக்கு வருத்தமாக இருந்தது.

ஆனால் அவருக்கு அப்படி இல்லை. 'இன்னும் ஆறு மாசம் இப்படித்தான் இருக்கும் — அப்புறம் வியாபாரம் சூடு கண்டு விடும்' என்றார் சிரித்துக் கொண்டே.

அந்த ஆறு மாசத்துக்கு வாடகை, இதர செலவுகளுக்கு வரும்படி?

'சின்ன மீனைப்போட்டுத்தானே பெரிய மீனை பிடிக்க வேண்டும்' என்று அவர் சொன்னதைப் பிற்பாடு பாலுவும் ஆமோதித்தான்.

பி.எஸ்.ஏ. கட்டிடம் இன்னும் ஆறு மாசத்தில் பிரம்மாண்டமாக ஆகி விடுமாம், துறைமுகத்தில் இறங்கும் அத்தனை வியாபாரிகளும் இந்தக் கடைகளில் தான் வியாபாரம் செய்வார்களாம்.

''அந்த ஆள் பணம் ஏகமாய் செய்வார். நீ வீணாய் கவலைப்படாதே'' என்றான் பாலு.

கடைக்காரரிடம் பேசின பின்பு கீழே இறங்கிப் போனோம்.

சுமாரான படகில் சவாரி இருக்கும் என்று எதிர்பார்த்தவளுக்கு இனிமையான ஏமாற்றம்.

அது ஒரு குட்டிக் கப்பல்!

இரண்டு தளங்களைக் கொண்ட அக்கப்பல் கிளம்பியது. மெதுவாய்த் தண்ணீரைக்கிழித்துக் கொண்டு சிங்கப்பூர் கடற்கரை ஓரமாய் வலம் வரத் தொடங்கியது.

இதமான காற்று, அசைந்து செல்லும் கப்பல், தூரத்தில் தெரிந்த சிங்கப்பூரின் விண்ணை முட்டும் கட்டிடங்கள்.

கால்மணி சென்றிருக்கும்.

நீலவானம் கணப்பொழுதில் கறுப்பாகி, சடசடவென்று பெருமழை.

நாங்கள் இருந்த இடத்தில் சாரல் அடித்ததால் கீழ்தளத்துக்குப் போய் ஏற்கனவே சிலர் அமர்ந்திருந்த இடத்தில் உட்கார்ந்தோம்.

இரண்டு ஆண்கள், இரண்டு பெண்கள், எல்லாருக்கும் 50—55 வயசு இருக்கும்.

ஹார்பரை அடைய இன்னும் முக்கால் மணி நேரம் இருந்தது. பக்கத்து ஸீட் பெண்மணி தானே வலிய என்னிடம் பேசத் தொடங்கினார்.

---

அவர் ஊருக்குப் புதிது. ஆற்றில் குளிக்கப் போனார். கரையில் அமர்ந்தபடி தூண்டிலில் மீன் பிடித்துக் கொண்டிருந்த ஒருவரிடம், ''ஏம்ப்பா இங்கே பெரிய மீனெல்லாம் வருமோ? குளிப்பவரைக் கடிக்குமோ?'' என்று கேட்டார்.

''அதெல்லாம் ஒண்ணும் கிடையாது சார்'' என்றார் மீன் பிடிப்பவர்.

''அப்படியானால் சரி'' என்ற புதியவர், உடைகளைக் களைந்து விட்டு ஆற்றிலிறங்கினார். மீண்டும் சந்தேகத்துடன் ''ஏம்ப்பா, இங்கே நிச்சயமா பெரிய மீன் எதுவும் வராதே?'' என்று கேட்டார்.

''வராது சார். இங்கே இருக்கற முதலைகளுக்குப் பயந்துக்கிட்டு எதுவும் வராது'' என்று பதில் வந்தது.

ஆர். எம்.



பேச்சு எங்கெல்லாமோ போய் விட்டுத் திடும்மென நான் சற்றும் எதிர்பாராத கோணத்தைத் தொட்டது. பிலிப்ஸ் என்றவர் பிலிப்பைன்ஸில் நடந்ததைச் சொன்னார்.

''பிலிப்பைன்ஸ் நாட்டு 'ஆவி வைத்தியர்' களைப் பற்றி (Faith and spirit healers) நீங்கள் கேள்விப்பட்டிருக்கலாம். நாங்கள் அனைவருமே சில்லறை வியாதிகளால் அவஸ்தைப் படுவதால் அந்த வைத்தியம் செய்து கொள்வதற்காக அங்கு போனோம். எனக்கு கண்களில் கோளாறு, மார்த்தாவுக்கு வயிற்றில் அல்சர், ஸாண்ட்ராவுக்கு முழங்கால் வலி, நார்மனுக்கு ஸ்பாண்டு லைடிஸ்'' என்று ஒவ்வொருவரையும் குறிப்பிட்டு வியாதியை விவரித்தார்.

இந்த ஆவி வைத்தியர்கள் கத்தி இன்றி, தையல் இன்றி ரண சிகிச்சை செய்வதில் வல்லவர்களாம். மானசீகமாய் இன்னாருக்கு இன்ன வியாதி என்று அறிந்து வெறும் கையாலேயே குணப்படுத்தி விடுவார்களாம்.

''நாங்கள் பாக்கியோ என்ற இடத்தில் உள்ள ஜுவினிதா என்ற வைத்தியரைப்பார்த்தோம். அறை முழுவதும் ஏசுபிரான் படங்கள் சிலைகள். மார்த்தாவுக்கு வயிற்றுவலி என்று மரபெஞ்சில் படுக்க வைத்து இரண்டு அஸிஸ்டெண்ட் பைபிள் படிக்கும் நேரத்தில் வெறும் கையால் வயிற்றைக் கீறி, ஜவ்வு போன்ற சதைப் பகுதியை எடுத்து வெளியே போட்டார் ஜுவினிதா — ஒரே ரத்தம். அப்புறம் பாருங்கள். வயிற்றைப் பார்த்தால் வெட்டினதும் தெரியவில்லை. ஒட்டினதும் தெரியவில்லை. கேட்டால் ஆவி செய்வதால் இப்படித்தான் இருக்கும், என்கிறார்கள். என் கண்ணால் நான் ரத்தம் பார்த்தேன். என் கண்வலிக்குச் சுவரில் சாய்ந்து நிற்க வைத்து எங்கிருந்தோ கறுப்பாய் உருண்டைக் கல் ஒன்றை எடுத்தார். எல்லாம் அதிசயமாய் இருந்தன...''

எனக்குத் தலையைச் சுற்றியது. ''கையால் ஆபரேஷனா? ரத்தமா? காயத்தின் வடு இல்லையா?''

''உங்கள் கண்வலி தேவலியா?'' என்றேன்.

''ஓ யெஸ் — தேவலை'' —

இதுநாழிகை வாயை மூடிக் கொண்டிருந்த நார்மன் குறுக்கிட்டார். ''எல்லாம் சுத்த ஹம்பக் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. ரத்தமாகத் தெரிந்தது ஏதோ சாயம். அந்த ஜவ்வு மாதிரி சதையை என் கையில் கொடுக்கச் சொன்னேன். மறுத்துவிட்டார், தொத்து வியாதி கிருமிகள் பரவும் என்று. கண்டிப்பாய் அது சூயிங்கம்தான் — ஏமாற்று வேலை—'' என்றார்.

''அப்போது என் கண்வலி குறைந்ததற்கு என்ன காரணம் சொல்லுகிறாய்?'' —

''யூ ஆர் ப்ரெயின் வாஷ்ட் — தட்ஸ் ஆல்.''

அவர்களுக்குள் இரண்டு கட்சிகள் இருந்ததால் வாதங்கள் வளர்ந்தன.

நம் நாட்டில் அகஸ்தியர் நாடி ஜோஸியம் படிப்பவர்களின், அகஸ்தியரைக் கொண்டு மூலிகை போடச் சொல்லி நோய்களைக் குணமாக்குகிறேன் என்று சொல்லும் பலரின், நினைப்பு என் நினைவில் தாண்டவமாடியது.

நம்பினால் தெய்வம், இல்லாவிட்டால் கல், என்கிற மாதிரிதானா இந்த விஷயமும்?

வாஸ்தவத்தில் எனக்குப் புரியவில்லை!

(தொடரும்)



ஜப்பானில் ஜோஸியக் காரர்கள் அதிகமாகி விட்டார்கள். ஒவ்வொரு முக்கிய வீதிகளிலும் இரவு நேரங்களில் அவர்களைக் காணலாம். சிலர் தனியாக அலுவலகங்கள் வைத்திருக்கிறார்கள். சில நிறுவனங்கள், தங்களிடம் வேலைக்காக விண்ணப்பிக்கும் மனிதர்களைப் பற்றிய குறிப்புக்களை ஜோஸியர்களிடம் கொடுத்து அவர்களுடைய எதிர்காலம், தங்கள் நிறுவனத்திற்கு அவர் விசுவாசமாக இருப்பாரா என்பன போன்ற விவரங்களைத் தெரிந்து கொள்ளும் அளவுக்கு அங்கே ஜோஸியம் மலிந்து விட்டது!

—டூதி பாயிண்ட் இன்டர்நேஷனல்

ஆர். எம்.



குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களிடம், ''உங்கள் ஃபோட்டோ ஒன்று வேண்டும் ஐயா'' என்றேன்.

''ஏன்? என்னை மாட்டி வைக்கப் போகிறீர்களா?'' என்றார் அவர்.

''ஆமாம் ஐயா, உங்களைச் சட்டத்தில் மாட்டி வைக்கப் போகிறேன். கண்ணாடி போட்ட சட்டத்தில்!''

நான் கேட்டதைத் தராமல் என்னை அழைத்துக் கொண்டு கடை வீதிக்கு வந்தார். திடீரென ஒரு போட்டோ ஸ்டுடியோவிற்குள் நுழைந்த அவர், என்னையும் இழுத்து அருகில் அமர்த்தி போட்டோ எடுக்க வைத்தார்.

''என்னை மட்டும் ஏன் மாட்டி வைக்க வேண்டும்? உங்களையும் சேர்த்தே மாட்டி வைக்கலாமே'' என்றார் அவர்!

- ரா. பொன்னரசன்

# "படங்களின் அறிவுரை பயன்படாது!

"பொன் மகள் வந்தாள் பொருள் தேடித் தந்தாள்" இன்றும் காதில் ஒலித்துக் கொண்டிருக்கும் பாடல். எப்பொழுதுமே பாட்டின் அடிகளுக்கேற்ப அழகாகப் படமாக்குவதில் விருப்பமுள்ளவர் ராமண்ணா. அவரை அணுகி உரையாடியபோது கூறினார்:

"இந்தப் பாட்டின் வரிகளுக்கேற்பக் காட்சி யமைத்துப் படமாக்க விரும்பினேன். பணம் காய்க்கும் மரம் என்று சொல்லிக் கேட்டிருக்கிறோம். அதுவே பெண்ணாக மாறிப் பணத்தையே உடையாக அணிந்து நடந்து வந்தால்? அதீத கற்பனைதான். ஆனால் படத்தின் வெற்றிக்கு இதுவும் ஒரு காரணமாயிற்று என்பதை மறுக்க முடியுமா? நூறு ரூபாய் நோட்டுக்களை உடையாகத் தைத்து, நடிகை விஜய லலிதாவுக்கு அணிவித்தோம். ஒரு பணம் காய்க்கும் மரம். அதிலிருந்து சில்லறைகள் கீழே விழுந்து சிதறிக் கொண்டிருந்தன. பிரும்மாண்டமான அளவில் இந்தக் காட்சியை அமைத்துப் படம் எடுத்தேன்.

"எம். ஆர். ஆர். வாசு இந்தப் படத்தில் ஏழு வேடங்களில் நடிக்கிறார். அவருக்கு ஜோடியாக வரும் சச்சுவும் நடிப்பது ஏழு வேடங்களில்தான். இந்தப் பதினாலு வேடங்களும் ஒரே இடத்தில் சந்திக்கின்றன. பாட்டு பாடுகின்றன. ஒளிப்பதிவுத் துறையில் சாதனை என்ற சொல்லுக்கு ஓரடி மேலேயே போய் விட்டோம் என்று கூறலாம்.

"ஒரு அம்பாஸிடர் கார் புதை மணலில் சிறுகச் சிறுக இறங்குவதுபோல் உண்மையாகவே படமெடுத்தேன். இந்தியாவிலேயே இதுவரை யாரும் இதைச் சாதித்ததில்லை.

"இப்படத்தில் வரும் சீஸர் நாடகம் என்றுமே வைரம் போல் ஜொலிக்கும். காரணம் சிவாஜி கணேசனின் சிறப்பான நடிப்புத்தான். எல்லா நகரங்களிலும் 100 நாட்கள் ஓடிற்று. இது வெளியான அன்றேதான் சிவாஜியின் "எங்கிருந்தோ வந்தாள்" என்ற மற்றொரு படமும் வெளியாகியது. இரு படங்களும் ஒரே சமயத்தில் 100 நாள் விழாவைக் கொண்டாடின. ஒரே மேடையில் இரு தயாரிப்பாளர்களும் இணைந்து சிவாஜியுடன் தோன்றினர். இவ்வளவு சிறப்புக்களும் பெற்ற "சொர்க்கம்" படம் தான் எனக்கு மிகவும் பிடித்தது."

"உங்கள் படங்கள் எல்லாவற்றிலுமே பொழுது போக்கு அம்சம்தான் அதிகமாகக் காணப்படுகிறது ஏன்?"

"சினிமா மீடியமே பொழுது போக்குக்காகவே இருப்பது தான். இரண்டரை மணி நேரம் மனிதன் தன் கவலைகளை மறக்கவும், மகிழ்ச்சியாகப் பொழுது போக்கவும் வழி வகை செய்வது தான் நமது கடமை."

"அப்படி யென்றால் படங்களில் message தேவை இல்லை என்கிறீர்களா?"

"என்னைப் பொறுத்தவரை படங்களில் தேவையில்லைதான். படத்தைப் பார்த்துத் திருந்துகிறான் மனிதன் என்பது நம்ப முடியாத ஒன்று. தவறான செய்கைகளையும் வன்முறைச் சம்பவங்களையும் சினிமாவில்



ராமண்ணா
பேட்டி





''சொர்க்கம்'' படத்தில் சிவாஜி, விஜயலலிதா

பார்த்து மனிதன் கெடுவதும் இல்லை. படங்களின் மூலம் உயர்ந்த லட்சியம் அல்லது ஒரு கருத்து வெளியிடப்பட வேண்டும் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை.''

''அப்படிப் பார்த்தால் நீங்கள் ஃபார்முலா டைரக்டர் ஆகி விடுகிறீர்கள் இல்லையா?''

''கண்டிப்பாக இல்லை. ஃபார்முலா என்பது இவ்வளவு பாட்டுக்கள், இவ்வளவு கேளிக்கை நடனங்கள், இவ்வளவு சண்டைகள், இவ்வளவு சோகக் காட்சிகள், இவ்வளவு காதல் கவர்ச்சிகள் என்று அமைப்பதில் இருக்கிறது. என்னுடைய படங்கள் எல்லாமே பொழுது போக்கு அம்சங்கள் நிரம்பப் பெற்றதுதான் என்றாலும் இந்த வரைமுறைக்குள் அடங்காது. என்னுடைய படங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மாதிரியானது. வெவ்வேறு கதையம்சம் கொண்டது.''

''உங்கள் கூற்றுக்கு மாருக இருக்கிறதே மூன்றெழுத்து. ''நான்'' படத்தின் பல்வேறு விதமான சாயல்களும், பாதிப்புக்களும் மூன்றெழுத்தில் இருக்கின்றனவே?''

''உண்மைதான் ஒப்புக் கொள்கிறேன். இதற்குக் காரணம் நானல்ல. எனது விநியோகஸ்தர்கள்தான். 'நான்' படம் வெள்ளி விழாக் கொண்டாடியது. இதன் விளைவு என்னை எல்லோரும் சேர்ந்து ''நான்'' படம் போலவே வேறு ஒரு படம் தயாரியுங்கள் என்று வற்புறுத்தி 'மூன்றெழுத்து' தயாரிக்கச் செய்து கெடுத்தார்கள். அன்றுதான் முதலும் கடைசியுமாக நான் விநியோகஸ்தர்கள் பேச்சைக் கேட்டது. அதற்குப் பிறகு நான் அவர்கள் பேச்சில் உள்ள நல்லவற்றை மட்டும் எடுத்துக் கொண்டு மற்றதை நிராகரித்து விடுவேன்.''

''படாடோபமான செட்டுக்கள், பிரமிக்க வைக்கும் காட்சிகள் இவை உங்கள் படங்களில் அதிகம் இருப்பதற்கான காரணம்?''

''பொழுதுபோக்கு அம்சங்களுக்கு முதுகெலும்பே பிரும்மாண்டமான ஜோடனைகளும், படாடோபமான காட்சிகளும்தானே. மக்களை மகிழ்விப்பதுதான் எனது குறிக்கோள். அந்தக் குறிக்கோளின் முதல் படி மலைக்க வைக்கும் செட்டுக்கள். சமீபத்தில் நான் எடுத்து வெளியிட்ட ''குப்பத்து ராஜா''வை என் படம் என்று ஒப்புக் கொள்ளவே பலர் மறுத்தனர். காரணம் என்னுடைய முத்திரைகள் என்று அவர்கள் நினைக்கும் பிரம்மாண்டமான காட்சி ஜோடனை அதில் இல்லை என்பதாலோ என்னவோ?''

பேட்டி: **சலன்**

# என் கட்சியைக் கேளுங்கள்!




**ஏப்ரல் 1வ. கோடைச் சிறப்பிதழில் அகஸ்தியன் எழுதிய கதைக்குப் பதிலளிக்கிறார் அவர் மனைவி.**

"என்னடி கமலா... அவங்க வீட்டுக்குப் போன அப்பா இன்னும் வரவில்லையே" என்று என் அம்மா கேட்டாள்.

"ஆமாம்" என்று பொதுவாகச் சொல்லி விட்டு அப்பா வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

என் கல்யாண விஷயமாக ஓர் 'இடத்'தைப் பார்க்கப் போயிருந்தார் அப்பா.

சுமார் பதினொரு மணிக்கு அப்பா வியர்க்க வியர்க்க வந்தார்.

"கமலா, பிள்ளை வீட்டார் இன்றைக்குப் பெண் பார்க்க வருகிறார்கள். சாயங்காலம் நாலு மணிக்கு" என்றார் என் அப்பா.

"எத்தனை பேர் வருவாங்க?"

"மூன்று நாலு பேர். எல்லாம் ரெடி பண்ணுங்க."

அன்று மாலை என் கணவர் (அந்தச் சமயத்தில் 'பிள்ளை') நம் அண்ணா மன்னி, அவர்களின் குழந்தைகளுடன் வந்தார்கள்.

அப்பா வரவேற்றார். அம்மா பஜ்ஜி, சொஜ்ஜி கொடுத்தாள்.

என் மைத்துனர், "என்ன பஜ்ஜி உருளைக் கிழங்கா... வேண்டாம். பஜ்ஜி என்றால் வெங்காயத்தில் போட வேண்டும்" என்றார். ஏதோ ஹோட்டலுக்கு வந்து இருக்கிறோம் என்று அவர் நினைப்பு!

அவருடைய குழந்தைகள் பஜ்ஜி தின்னும் போட்டியில் கலந்து கொண்டது போல் வாரி வாரிச் சாப்பிட்டன. என் கணவர், "காப்பிக்குக் கொஞ்சம் ஷுகர் வேண்டும்" என்றார். "பெண்பார்க்க வந்தார்களா காப்பி சாப்பிட வந்தார்களா, சரியான வயிற்றுப் பட்டாளமாக இருக்கிறார்களே" என்று என் தங்கை கிகிகிவென்று என்னிடம் கூறினாள்.

"பெண்ணை வரச் சொல்லுங்கள்!" என்றார் என் மைத்துனர்.

"இதோ வந்துடுவா... புடவை கட்டிக் கொண்டிருக்கிறாள்" என்று அம்மா சொன்னதும் —

"புடவை கட்டிக்காமல் ஃப்ராக் போட்டுக் கொண்டுவந்தாலும் பரவாயில்லை" என்று என் கணவர் ஜோக் அடித்தார்.

அப்போது ஆரம்பித்த மகா அபத்த ஜோக்குகள் இன்றும் — 25 வருட திருமண வாழ்க்கைக்குப் பிறகும் — என்னை விடவில்லை!

அவரைத் தொடர்ந்து அவருடைய மன்னி "எங்க மச்சினர் பெரிய எழுத்தாளர்" என்றாள். பின்னால் எனக்குத் தெரிந்தது இவர் 'பெரிய' எழுத்தாளர்தான் என்பது. அதாவது கொட்டை கொட்டையாகப் பெரிய எழுத்தாகத்தான் அவர் எழுதுவார்!"

"பெண்ணைப் பாடச் சொல்லுங்கள்" என்றார்கள்.

நானும் ஒரு கல்யாணி ராக தியாகராஜ கீர்த்தனையைப் பாடினேன். பாடி முடித்ததும் என் கணவர் "எனக்குத் தியாகராஜர் கிருதி என்றால் பிடிக்கும். அதில் ஒன்று பாடச் சொல்லுங்கள். கல்யாணி ராகத்தில் பாடினால் நல்லது" என்றார்.

நான் பாடி முடித்ததும், "போய் லெட்டர் போடுகிறோம்" என்று சொல்லி விட்டுப் போனார்கள்.

மறுநாள் கடிதாக வந்தது. பையனின் அம்மா அப்பா அத்தை என்று ஏழெட்டுப் பேர் பெண்ணைப் பார்க்க வருவார்கள் என்று.

மறுபடியும் பஜ்ஜி, சொஜ்ஜி பண்ணினாள் அம்மா.

எல்லாரும் வந்தார்கள். அத்தை ஒரு முழம் பூவை என்னிடம் கொடுத்தாள். "பஸ் ஸ்டாண்டில் தான் பூ கிடைத்தது. எல்லோருக்கும் கொஞ்சம் துண்டு போட்டுக் கொடு அம்மா" என்றாள்.

மொத்தம் எட்டு பேருக்கு ஒரு முழம் பூவைத் துண்டுபோட்டுத் தரச் சொல்கிறாள்! ஆகா, தாராளம் என்பதற்கு மறுபெயர் என் கணவரின் அத்தைதான்!

இவர்கள் பார்த்து விட்டுப்போன பிறகு பிள்ளையின் மாமா, மாமி என்று ஏழெட்டுப் பேர், பெரிய அண்ணா மன்னி என்று நாலைந்து பேர், அவர்கள் வீட்டு மாப்பிள்ளைகள் என்று மூன்று பேர், யாரோ சித்தப்பா சித்தி என்று ஐந்துபேர் — இப்படிப் பல குழுக்கள் வந்தன.

"இப்படிப் பட்டாளம் பட்டாளமாக வரும் என்று தெரிந்திருந்தால் 10 கிலோ உருளைக் கிழங்கை மொத்தமாகப் பஜ்ஜி




போட்டு அரை [illegible] நகையைக் கேரி பண்ணி வைத்திருக்கலாம்'' என்றேன் அம்மாவிடம்.

வருகிறவர்கள் ஒவ்வொருவரும் ''எவ்வளவு சவரன் நகை?'' என்று கேட்க மறக்க மாட்டார்கள். அவர்கள் குடும்பத்தைப் 'பொண்ணுக்கு வீங்கி' நோய் விடாமல் பிடித்திருந்தது!

ஒருவாறாகக் கலியாணம் நிச்சயமாயிற்று. ''ரொம்ப சிம்பிள் மேரேஜ் போதும்'' என்றார்கள். 'சிம்பிள்' என்ற வார்த்தைக்கு அவர்கள் அகராதியில் வேறு அர்த்தம் — என்பது எங்களுக்கு விரைவில் புரிந்தது.

சென்னையில் உள்ள ஒரு குறிப்பிட்ட சத்திரத்தில் கல்யாணத்தை நடத்தலாம் என்றார்கள். அதுதான் சென்னையிலேயே வாடகை அதிகம் வாங்கும் கல்யாண மண்டபம் என்று தெரிந்தது. சிம்பிளாக ரிசப்ஷன் என்றார்கள். பிரபலமான வித்வானின் பாட்டுக் கச்சேரி என்றார்கள்.

சத்திரம் பெரியதுதான். ஆனால் எங்கள் செலவில் சென்னைக்கு பிக்னிக் வந்தவர்கள் — அவர்கள் மனிதர்கள் — ஏராளம். நாங்கள் போய் இறங்கு முன்பே அவர்கள் உறவினர்கள் வந்துவிட்டு வாயை ஆவென்று திறந்து காத்துக் கொண்டிருந்தனர். பசிப் பட்டாளம்!

சாப்பிட்ட கையோடு செத்த காலேஜ், உயிர் காலேஜ் என்று புறப்பட்டுவிட்டனர்.

''திரும்பி வர நேரமாகுமா?'' என்று கேட்டபோது ''காப்பி டைமுக்கு வந்து விடுவோம்'' என்றார்கள். அவர்களுடைய கடிகாரம், காப்பி டைம் இட்டிலி டைம் சாப்பாட்டு டைம் என்றுதான் காட்டுமோ?

இவர்களைத் தொடர்ந்து சுமார் எட்டு பத்து இளைஞர்கள் அட்டகாசமாக வந்தார்கள். 'வீ ஆர் அகஸ்தியன்ஸ் ஃப்ரண்ட்ஸ்'




என்றார்கள். அந்தப் பிரஸ்டிஜைப் பெற்றவர்கள் பிரண்டையைத்தான் கட்டிக் கொள்ளவேண்டும். வேதாள உலகம் பாதாள பைரவி, ஆகிய படங்களில் நடிப்பதற்கு ஏற்ற முகவெட்டு.

அவர்களில் சற்று வயசானவராக இருந்தவர் — பெயர் ராம்குமார் என்று பின்னால் தெரிந்தது — அவர் என்னைப் பார்த்து ''மாமி, மாடியில்தானே பிள்ளை வீடு. நாங்கள் மேலே போகிறோம். ஒரு ஜமுக்காளம் தாங்கோ. அப்புறம் ஒரு பக்கெட் காப்பி அனுப்புங்கோ'' என்றார். கிழவர் மாதிரி இருந்த அவர் என்னை மாமி என்றார்!

மேலே சென்றதும் கச்சேரி ஆரம்பித்து விட்டார்கள். ரம்மி ஆட்டம். அவ்வப்போது யாராவது அரை டிக்கட்டை அனுப்பி வெற்றிலை சீவல் கேட்பார்கள். இல்லாவிட்டால் காப்பி. அவர்கள் சாப்பிட்ட வெற்றிலை நாலு ஆடுகள் எட்டு நாள் சாப்பிட்டிருக்கும் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

அப்போது உட்கார்ந்தவர்கள், கல்யாணம் முடிந்து சத்திரத்தைக் காலி பண்ணும்போது தான் ஆட்டத்தை முடித்தார்கள்.

**பி**ற்பகல் நாலு மணி வாக்கில் பிள்ளையும் மற்றவர்களும் வந்தார்கள்.

'எங்க மனுஷா பெண்ணைப் பார்க்கணும்' என்று சொல்லி அனுப்பினார்கள். கலியாணத்துக்கு முன்பே கும்பல் கும்பலாக வந்து பார்த்த பிறகும் பார்க்காதவர்கள் வேறு இருக்க முடியுமா என்று எங்களுக்குச் சந்தேகம்.

நான் போய் நின்றேன் அடக்கவொடுக்கமாக.

அவ்வளவுதான். கமெண்ட் அடிக்க ஆரம்பித்தார்கள். "நம்ம வல்லி மாதிரி இருக்கிறாள்" என்றாள் ஒரு மாமி. (வல்லி கிட்டத் தட்ட திருஷ்டி பூஷணிக்காய் படம் மாதிரி இருப்பவள்!) "மாநிறமும் இல்லே ஒண்ணும் இல்லே. கறுப்பில்தான் சேர்த்தி. நம்ப பையன் கடைசியில் ஒரு ப்ளாக் ப்யூட்டியை செலக்ட் பண்ணி இருக்கிறானே!" என்றாள் ஒரு தச்சுப்பல் நங்கை. "மூக்கு கொஞ்சம் சப்பைதான்" என்று கமெண்ட் அடித்த பெண்ணின் மூக்கின் மேல் ஒரு குத்து விடலாமா என்று தோன்றியது. அப்போதே தீர்மானித்து விட்டேன், இவர்கள் வீட்டில் சாதுவாக இருந்தால் சாப்பிட்டு விடுவார்கள்! நாம் தக்கபடி மாறிவிட வேண்டும் என்று!

## எதிர்காலச் செல்வங்கள்

நான் காலையில் பேப்பர் படித்துக் கொண்டிருக்கும் பொழுது எனது ஐந்து வயதுப் பையன் வயிற்றுவலி என்று சொல்லி அழ ஆரம்பித்தான். நான் அவனைச் சமாதானம் செய்து, 'வயிறு காலி. வயிற்றில் ஒன்றுமில்லே. அதனால்தான்' என்று கூறித் தாயாரிடம் அனுப்பி வைத்தேன்.

அன்று மாலை எனது உறவினர்கள் என் வீட்டுக்கு வந்திருந்தார்கள். பையனும் என்கூட இருந்தான். பேசிக் கொண்டிருக்கும் பொழுது ஒருவர் தனக்குக் கொஞ்ச நாட்களாகத் தலை வலி அடிக்கடி வந்துகொண்டிருக்கிறது என்று சொல்லி கொண்டிருந்தார். அதைக் கேட்ட பையன், உடனே, 'உங்கள் தலை காலி போலிருக்கிறது. தலையில் ஒன்றுமே இல்லே. அதனால் தான்!' என்று நான் காலையில் அவனிடம் கூறியதை வைத்துக் கொண்டு சொன்னான். அவருக்கு என்னமோ மாதிரி ஆகிவிட்டது. ஆனால் நான் விஷயத்தை விளக்கிய பிறகு சமாதானமடைந்து சிரித்தார். -வெ. ஜம்புநாதன்



"**மா**ப்பிள்ளை அழைப்பு மாடியிலிருந்து கீழ் ஹாலுக்கு வர வேண்டியதுதானா? பரவாயில்லே. வீட்டுக்குள்ளேயே இருந்தாலும் ஒரு சம்பிரதாயத்துக்குப் "பாண்ட்" வைக்க வேண்டாமா?" என்று கேட்டது பிள்ளை வீட்டுக் கிழம்.

பிள்ளை அழைப்பு நடந்தது. கீழே வந்த பிள்ளை வீட்டார் அனைவருக்கும் காப்பி சப்ளை நடந்தது. அது அவர்கள் வீட்டுப் பழக்கமாம். எங்கேயோ ஊர்ப் பயணம் செய்து விட்டு வந்த மாதிரி மகா அலுப்புடன் காப்பிக்குப் பறந்தார்கள்.

என் கணவர் "கொஞ்சம் ஷுகர் வேண்டும்" என்று மறக்காமல் கேட்டார். அத்துடன் புரோகிதரிடம் "சீக்கிரம், சீக்கிரம் ஆகட்டும்" என்று அவசரப் படுத்தினார். ஏதோ பல அவசர ஜோலிகளுக்கிடையே கல்யாணம் செய்து கொள்ள வந்தவர் போல் தத்தளித்தார். அவசரத்துக்குக் காரணம், மாடி கோஷ்டி ரம்மியின் சர்ப்புதான்!

விடிய விடியச் சீட்டு ஆடிக் கொண்டிருந்தவரைக் கிளப்பி முகூர்த்த மேடைக்கு வரச் செய்வதற்குள் பெரும் பாடாகப் போயிற்று. சீட்டில் ஏகப்பட்ட நஷ்டமாம்.

முகூர்த்தத்துக்குப் பிறகு எங்கள் உறவினர்கள் சாப்பிடப் போன போது கிட்டத் தட்ட எல்லாமே காலியாகி இருந்தது.

சமையல்கார சேச்சு என் அம்மாவிடம் சொல்லிக்கொண்டிருந்தார்: "பிள்ளை வீட்டுக்காரர்களுக்கு வயிறு, கழுத்து வரை இருக்கு. என்னமாய்ச் சாப்பிடுகிறார்கள். இத்தனைக்கும் சாம்பாரில் ஒரு கல் உப்பு ஜாஸ்தி போட்டேன்... சாப்பிட்ட மீதிக்கு டிபன் — காரியரில் வேறு எடுத்துக் கொண்டு போனார்கள். யாரோ — திருவல்லிகேணி மாமாவுக்கு, எழும்பூர் அத்தைக்கு, பார்க் டவுன் பாட்டிக்கு என்று!"

**ரா**த்திரி பூரா சீட்டாடிய இவர் தூங்கிவழிந்தார். அந்தத் தூங்கு மூஞ்சிக் களை இவருக்குப் பிறவியிலேயே வந்திருந்த வரப்பிரசாதம்!

"என்ன கமலா. நான் பெரிய நாவல் எழுதப் போகிறேன். ஒரு இவன் — அவனுக்கு ரொம்ப இது. ஆகவே அவன் மெட்ராஸுக்கு வரான். நடுவிலே என்னாச்சு என்றால்..." என்று அவருக்குப் புரியாத கதையைக் கொஞ்சம் கூட எனக்கு விளங்காத முறையில் கூற ஆரம்பித்தார்.

கல்யாணத்தன்று புது மனைவியுடன், தான் எழுதப் போகும் கதையைப் பற்றியா பேசுவார்கள்? ஒரு சின்ன விஷயம்: அன்றிலிருந்து இன்றுவரை தான் எழுதப் போகும் கதைகளை ஆயிரக் கணக்கில் சொல்லியிருக்கிறாரே தவிர ஒரு கதை கூட எழுதியதில்லை!

அது மட்டுமல்ல, அம்மாவைக் கேட்காமல் தும்மக் கூடமாட்டார். உதாரணமாக ஃபேனை போட்டுக் கொள்ள வேண்டுமென்றால் அம்மாவைக் கேட்டுத்தான் போட்டுக் கொள்வார். அதே பழக்கம் இன்றைக்கும் மின் விசிறியைப் போட்டுக் கொள்ள வேண்டும்போது, தன் பெண்ணைக் கூப்பிட்டு, "ஆனந்தி, புழுக்கமாக இருக்கு. அம்மாவைக் கேட்டு ஃபேனைப் போடு" என்பார்!




# அபார்ஷன்கள் அவசியம் தானா ?

(குடும்பக் கட்டுப்பாடு இந்தியாவுக்கு மிகமிக அவசியமான அம்சம். பிரபல மகப்பேறு மருத்துவர் திருமதி லக்ஷ்மி சதுர்வேதி அவர்களைச் சந்தித்து இத்துறை சம்பந்தமாகக் கேட்டபோது...

கேள்வி: 'வாசெக்டமி' செய்து கொள்வதால் சில ஆண்களுக்கு மனோ வியாதிகளும், நரம்புத் தளர்ச்சி போன்ற சில பாதிப்புகளும் உண்டாவதாகக் கூறப்படுகிறதே?

லக்ஷ்மி: அது மிகமிக அபூர்வமாக நடப்பது. திறமையான மருத்துவரால் சிறப்பாக இந்த அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டால் எவ்வித கோளாறும் வராது. மிகவும் சுலபமான அறுவை சிகிச்சை இது. மாறாகப் பெண்களுக்கு 'டியூபெக்டமி ஆபரேஷன் செய்வதுதான் கடினமானது.'

கேள்வி: 'வாசெக்டமி' ஆபரேஷன் செய்து கொண்ட ஆண்கள், சில ஆண்டுகளுக்குப் பின்னர் தாங்கள் விரும்பினால் இந்த ஆபரேஷனை மாற்றி விட்டு மறுபடியும் அவர்கள் குழந்தைகளைப் பெறத் தகுதியானவர்களாக முடியும் என்று கூறப்படுகிறதே?

லக்ஷ்மி: உடற்கூறு அடிப்படையில் இது சாத்தியமானதுதான். ஆனாலும் இனி குழந்தை வேண்டாம் என்று முடிவெடுக்கும் சமயம் இந்த ஆபரேஷனைச் செய்து கொள்வதுதான் சரியானதாகக் கருதுகிறேன்.

கேள்வி: கணவன் 'வாசெக்டமி' செய்து கொண்ட பின்னர், ஆபரேஷனில் உள்ள கோளாறால் அவனது மனைவி மறுபடியும் கருத்தரிப்பதற்கு வாய்ப்பு உள்ளதாக அறிகிறோமே! இம்மாதிரி ஏற்பட்டால் கணவன் மனைவியைப் பற்றிச் சந்தேகிக்கும் சூழ்நிலை உண்டாகுமே!

லக்ஷ்மி: 99.5 சதவீதம் இம்மாதிரி ஆபரேஷன் தோல்வி அடைவதில்லை. எங்கோ ஒருவருக்குத் தோல்வி ஏற்பட்டாலும் பரிசோதனைகள் மூலம் அவரது நிலைபற்றி விளக்கம் பெற முடியும். எனவே வீண் சந்தேகங்களையும் போக்கிவிட முடியும்.

கேள்வி: கருச்சிதைவு செய்து கொள்வது சட்டபூர்வமாக அனுமதிக்கப்படுகிறதே! இது எவ்விதத்தில் சரியானது என்று கருதுகிறீர்கள்? இறைவனால் கொடுக்கப்படும் ஓர் உயிரைப் பறிக்க மனிதனுக்கு என்ன உரிமை இருக்கிறது?

லக்ஷ்மி: கருச்சிதைவை நானும் ஆதரிப்பவள் இல்லைதான். எவருக்கேனும் கருச்சிதைவு செய்யும்போது என் மனமும் பாடுபடத்தான் செய்யும். ஆனாலும் ஒரு தாய் தனக்கு அக்குழந்தை வேண்டாம் என்று தானே வந்து கேட்கும் போது அவளுக்குச் சட்டம் உதவி புரியத்தான் வேண்டும். பொதுவாக என்னை அணுகும் இத்தகைய தாய்க்கு, அக்குழந்தையை வளர விட்டு விட்டு, குழந்தை பிறந்தவுடன் அதோடு முற்றுப் புள்ளி வைக்க 'டியூபெக்டமி' ஆபரேஷன் செய்து கொள்ளும்படிதான் அறிவுரை வழங்குகிறேன். தனது குடும்பச் சூழ்நிலை அடிப்படையில் அத்தாய் வற்புறுத்தினால் மட்டுமே அபார்ஷன் செய்வதுண்டு.

**கேள்வி:** கருச்சிதைவு செய்து கொள்வதைச் சட்டப்படி அனுமதிப்பதால் மணமாகாத பெண்கள் கூட நெறிதவறிப் போக வழி ஏற்படுகிறதே!

**லக்ஷ்மி:** சபலத்துக்கு அடிமையாகி நெறி தவறிப் போகும் மணமாகாத பெண்கள் எந்த காலத்திலும்தான் இருக்கிறார்கள். சட்டப்படி கருச்சிதைவை அனுமதிப்பதால் பெண்கள் கெட்டுப் போக ஊக்குவிப்பதாகிறது என்பதை ஒப்புக் கொள்ள மாட்டேன். ஒரு மணமாகாத பெண் தவறிழைத்து விட்டாளானால் சட்டப்படி கருச்சிதைவு செய்து கொள்ள அனுமதிப்பதன் மூலம் அவள் தன்னைத் திருத்திக் கொண்டு புனர்வாழ்வு ஏற்படுத்திக் கொள்ள வாய்ப்பு உள்ளது. இல்லாவிடின் இத்தகைய பெண்கள் தற்கொலை புரிந்து கொள்வார்கள். போலி டாக்டர்களிடம் சிக்கிக் கொண்டு அவதிப் படுவார்கள். இப்பேட்டி மூலம் மணமாகாத பெண்களுக்கு ஓர் எச்சரிக்கை விடுக்க விரும்புகிறேன். சபலத்தால் நெறி தவறிப் போய், கருச்சிதைவுக்காக என்னிடம் வந்த பெண்களின் மனநிலை பற்றியும் வாழ்க்கையைப் பற்றியும் எனக்குத் தெரியும். கருச்சிதைவு செய்து கொள்வது உடலுக்கும் உள்ளத்துக்கும் எத்தகைய வேதனையைத் தரக் கூடியது என்பது அதைச் செய்து கொண்டவர்க்குத் தெரியும். எனவே தவறிழைத்து வாழ்க்கையை வீணடித்துக் கொள்ளாதீர்கள் என்பது தான் என் அறிவுரை.

**கேள்வி:** கருச்சிதைவை கருத்தரித்து எந்தக் கால கட்டம் வரை செய்து கொள்ளலாம்?

**லக்ஷ்மி:** சாதாரணமாகக் கருத்தரித்து எட்டு வாரங்கள் வரை அறுவை சிகிச்சை செய்யாமலேயும், அறுவைச் சிகிச்சை மூலம் நாலு மாதம் வரையும் செய்யலாம். எனினும் இதைத் தவிர்ப்பதே புத்திசாலித்தனம்.

**கேள்வி:** லூப் கூட பெண்கள் பொருத்திக் கொள்ளும் கருத்தடை முறைகூட எல்லாச் சமயங்களிலும் பலனளிப்பது இல்லை என்றும், இதனால் பெண்களுக்கு உடற்கோளாறுகள் உண்டாகின்றன என்றும் சொல்லப்படுகிறதே?

**லக்ஷ்மி:** தேர்ச்சியான மருத்துவரால் லூப் பொருத்தப் பட்டால் இம்மாதிரி நிகழாது. பாலிதீனில் செய்யப்பட்ட 'லூப்' சிலருக்குப் பயன் தராமல் போகலாம். Copper – T என்று சமீபத்தில் வந்துள்ளது. இதை உபயோகிக்கலாம். இதனால் ஆரம்ப காலத்தில் ரத்தக் கசிவு உண்டாகலாம். காலப் போக்கில் சரியாகி விடும்.

**கேள்வி:** பில்ஸ் என்ற மாத்திரைகள் உபயோகிப்பதால் பலவிதக் கோளாறுகள் உண்டாகின்றன என்பது பற்றி உங்கள் விளக்கம் என்ன?

**லக்ஷ்மி:** பில்ஸ் ஒரு நிரந்தரமான கருத்தடைச் சாதனம் அல்ல. அதிகமாக பில்ஸ் விழுங்கினால் வேண்டாத விளைவுகள் உண்டாகச் சாத்தியக் கூறுகள் நிச்சயம் உள்ளன. ஒரு குழந்தைக்கும் இன்னொரு குழந்தைக்கும் உள்ள இடைவெளியை அதிகப்படுத்தும் நோக்கில் இதனைத் தாற்காலிக சாதனமாக உபயோகப் படுத்திக் கொள்ளலாம்.

**கேள்வி:** ஆண்கள் கருத்தடை சாதனம் உபயோகிப்பது பற்றி...

**லக்ஷ்மி:** அதுவும் தாற்காலிகமானதுதான்.

**கேள்வி:** எந்தக் கருத்தடை முறை சரியானது என்பது தங்கள் அபிப்பிராயம்?

**லக்ஷ்மி:** அவரவர் வசதிப்படியும், மனோபாவப் படியும், இரண்டோ அல்லது அதிக பட்சம் மூன்று குழந்தைகளோ பெற்றுக் கொண்டபின் கணவன் 'வாசெக்டமி' செய்து கொள்வதுதான் சுலபமான சிறந்த கருத்தடை முறை. கணவனால் முடியாவிடின் மனைவி 'டியூபெக்டமி' செய்து கொள்ள வேண்டும்.

பொதுவாக மத்திய தர வர்க்கமும், உயர்மட்டத்தில் இருப்பவர்களும் தற்போது தாங்களாகவே குடும்பக் கட்டுப்பாட்டு முறைகளை அனுஷ்டித்து அளவான குடும்பத்தை அமைத்துக் கொள்கின்றனர். பொருளாதார கீழ்மட்டக் குடும்பங்களிலும், கிராமப்புற மக்களிடையேயும் இம்முறைகளை இன்னும் பிரபலப்படுத்த அரசு பாடுபட வேண்டும்.

ஆண்கள் முப்பது முப்பத்தோரு வயதிலும், பெண்கள் இருபத்தைந்து வயதிலும் திருமணம் செய்து கொள்ள வேண்டும். இப்படி விவாக வயதை உயர்த்துவது ஜனத்தொகை குறைய உதவும்.

**கேள்வி:** குடும்பக் கட்டுப்பாட்டில் கட்டாயத்தை அரசு புகுத்துவது பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?

**லக்ஷ்மி:** ஓரளவுக்குக் கட்டாயத்தைக் குடும்பக் கட்டுப்பாட்டில் அரசு புகுத்துவதை ஆதரிப்பவள் நான். ஆனால் அவ்விதி முறைகள் நெருக்கடிக் காலத்தின் போது நிகழ்ந்தது போன்று தவறான வழியில் பயன்படுத்தப் படாமல் அரசு எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

பேட்டி: **நாயகன்**

**புகைப்படம்: மன்னை மூர்த்தி**



**பின்புற அட்டைப் படம் எடுக்க உதவியவர் டாக்டர் கனகவல்லி, ஞானம்மா நர்ஸிங் ஹோம்**

புகைப்படம் எடுத்தவர் **உத்ரா**






நாலு பேரிடம் நான்கு நூல்களைத் தந்துவிட்டு ஒரு வாரம் சென்றபின் சந்தித்தபோது:



## தெய்வ வாக்கு

கலைஞர் கருணாநிதி நகரில் வசிக்கும் திருமதி நளினிராகவன், (டெலிபோன் ஆபரேடர்):

''எப்போதுமே மாடர்ன் நாவல்களைப் படிக்கிற எனக்கு நீங்க இதைக் கொடுத்ததும் முதல்ல பயமாக இருந்தது. ஆனா புஸ்தகம் ஆரம்பத்திலிருந்து ரொம்ப இன்டரஸ்டிங்காக இருக்கிறது. கீழே வைக்கவே மனசு வரலே.

''காஞ்சிப் பெரியவர்கள் ஜெயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளின் அருள்வாக்குகளைக் கொண்ட தொகுப்புதான் இந்தப் புஸ்தகம். இதைப் படிக்கும் போதே பக்தி பெருகறது. மாணவர்களுக்காக விளையும் பயிர் பகுதி உள்ளது. வீட்டுத் தலைவிக்கு, தலைவனுக்கு என்றும் பகுதி பகுதியாகப் பெரியவர்கள் பிரிச்சுச் சொல்லியிருக்கார்.

திருமாங்கல்யத்தின் முக்கியத்துவம், பூஜை முறைகள், சுவாமி வழிபாடு, தவிர பகவத் கீதை, ராமாயணம், சௌந்தர்ய லஹரி பற்றி எவ்வளவோ தெரியாத விஷயங்களைத் தெரிஞ்சுக்க முடிஞ்சது.

பிள்ளைகளை எப்படி வளர்க்க வேண்டும் என்கிறதை ரொம்ப அழகாகச் சொல்லியிருக்கார். கணவன் செய்ய வேண்டிய கடமைகளைச் சொல்லியிருக்கார்.

அட்டையிலே காஞ்சிப் பெரியவர்கள் படத்தைப் போட்டிருக்கா. எங்கு வைத்தாலும் அழுக்காகி விடும். அவர் படத்தை உள்ளே போட்டிருக்கலாம். விலை கொஞ்சம் அதிகம். சாதாரண ஜனங்களுக்குக் கையைக் கடிக்கும்.

''தெய்வவாக்கு'', காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருள்வாக்குகள், வெளியீடு: வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17, விலை: ரூ. 9.00

## நவீனன் டைரி

தி. நகரில் வசிக்கும் இரத்தப் பரிசோதகர் திரு வி. ராமமூர்த்தி:

''நீங்கள் படிக்கச் சொன்னதால் படித்தேன். நவீனன், என்ற கதாசிரியரின் வாழ்க்கைச் சம்பவங்கள் கொண்ட டைரிதான் இந்தப் புத்தகம்.

இதிலே விறுவிறுப்பு கொஞ்சமும் இல்லை. படிக்க அலுப்பும், சலிப்பும்தான் அதிகமாகிறது. ஆரம்ப ஆசிரியர் எழுதுவது போன்ற நடையாகத்தான் தெரியறது.

நவீனமாக எழுதுவதாக நினைத்துக்கொண்டு ஒரே அபத்தமாக எழுதியுள்ளார். காகித நெருக்கடி காலத்தில் இவ்வாறு வெள்ளைத் தாளை வீணடிச்சிருக்காங்க. ஒரு உதாரணம்:



எது?
யார்?
போ?
நில்?
நகர்
சாவு
அன்னம்பெகோ
இடுப்புநீழ்

ஆசிரியரோட நோக்கத்தை என்னால் புரிஞ்சுக்க முடியலே. என் தலையே வெடித்துவிடும் போல இருக்கு. மொத்தத்திலே நாவல் ''படுபோர்''. நீங்க இலவசமா கொடுத்த புத்தகத்தை நான் வாசிச்சுட்டேன். இதையே ரூபாய் கொடுத்து வாங்கி வாசித்தவருக்கு எப்படி இருக்குமோ? நாவலின் தலைப்பு ''டைரி'' என இருப்பதால் எந்த வகையான பேத்தலையும் எழுதலாம் போலிருக்கு.

''நவீனன் டைரி'', ஆசிரியர்: நகுலன், வெளியீடு: இலக்கிய சங்கம், 23, பி எஸ்ப் குவார்டர்ஸ், சென்னை-600034. விலை ரூ. 10

## சினிமா டைரி

சைதாப் பேட்டையில் வசிக்கும் கோயில் குருக்கள் எஸ். சுந்தரேசன்:

''எனக்கும் சினிமாத் துறைக்கும் சம்பந்தம் இல்லாவிட்டாலும் முழுசாப் படிச்சேன். நடிக நடிகையரின் விலாசமும் அவங்களைப் பற்றிய குறிப்பும் கொண்டது இந்த டைரி. கார்ப்பரேஷனால் வீட்டு எண்கள் மாற்றப்பட்டிருப்பதற்கு ஏற்ப டைரியில் சில நடிக நடிகையர் விலாசம் மாற்றப் படலை. உதாரணமாக நடிகை பத்மப்ரியா தி. நகர் மூஸா ஸாஹிப்

# கிரிக்கெட் கற்கலாம்! 35

கோச்: **கே. சந்திரசேகர்**
படம்: ராஜ் தயாரிப்பு: **குண்டுமணி**

## விக்கெட் நடுவே ஓட்டம்! –2

பந்தைத் தாக்காத பாட்ஸ்மன் ஓட்டத்துக்கு எப்பொழுதும் ஆயத்த மாகும் பழக்கத்தை விருத்தி செய்து கொள்ளவேணும். அதுவும் பந்து வீச்சாளர் பந்தை வீசிய பிறகே ஓட்டத்தைத் தொடங்க வேணும். ஒற்றை ரன்னுக்கு உன்னை எப்பொழுதும் தயாராக வைத்திரு.





பாட்ஸ்மன் எல்லைக் கோட்டை பந்து வீசிய பிறகே கடக்க வேண்டும். இல்லா விடில் பௌலர் விக்கெட்டைத் தாக்கி 'அவுட்' ஆக்கி விடுவார்!







பாட்ஸ்மன் எல்லைக்கோட்டிலே ஸ்திரமாக நின்று விட்டால் பிறகு விரைவான ஒற்றை ரன் எடுப்பது கஷ்டம். சில சமயம் எளிதான ரன் ஓட்டமும் சிரமமாக இருக்கும்.







தெருவுக்கு வந்து விட்டார்கள். டைரியில் பழைய சி. ஐ. டி. நகர் விலாசம்தான் போட்டிருக்கு.

இந்தப் புத்தகம் கிராமப் பக்கங்களிலே உள்ள சினிமா ரசிகர்களுக்கு உதவியாக இருக்கும்.

சென்னையிலே உள்ள எல்லாத் தியேட்டர்களோட விலாசத்தையும் சேர்க்க வேண்டும். தமிழகத்தில் அந்த அந்த ஆண்டில் புதுசாத் தோன்றியுள்ள தியேட்டர்களைப் பற்றிக் குறிப்பைச் சேர்த்துக்கணும்.

போன வருடத்திலே வந்த மொத்த தமிழ், இந்தி, படங்களின் பட்டியல்கள், ஜனாதிபதி பரிசு பெற்ற படங்களும், நடிக நடிகையரும் பற்றிய செய்திகள் ஆகியவை சேர்த்தா சௌகரியமாக இருக்கும்.

சினிமா ரசிகர்களுக்கும், சினிமா சம்பந்தப் பட்டவங்களுக்கும் இந்தப் புத்தகம் பஞ்சாங்கம் போல.

''சினிமா டைரி'' ஆசிரியர்: அன்பு, வெளியீடு: அன்பு பப்ளிகேஷன்ஸ், 163 (புதிய நம்பர் 6) கொய்யாத் தோப்பு, சென்னை–33, விலை: ரூ 10 –.

## காவல் துறையின் கதை

அண்ணா நகரில் வசிக்கும் இசைக் கலைஞர் திரு. செங்கோட்டை கங்காதரன்:

புத்தகத்தைக் கையில் வாங்கியதும் போரடிக்கும்னு ஒரு நினைப்பு இருந்தது. படிக்க ஆரம்பிச்சதும் என் எண்ணம் தவறு என்பது புரிஞ்சு போச்சு. போலீஸ்னா லாக்அப், அடி, உதை எல்லாம்தான் நினைவு வரும். ஆனால் இந்தப் புஸ்தகம் போலீஸ் துறை ஆராய்ச்சி சிறப்புக் கொண்டது என்பதை வெளிப்படுத்துகிறது.

பல்வேறு நாடுகளில் போலீஸ் இலாகா முன்னேறிய விதங்களை நகைச்சுவையாக ஆசிரியர் சொல்லியிருக்கார்.

பல நூல்களை ஆராய்ந்து தொகுத்து வழங்கிய விதம், குற்றம் செய்பவர்கள் மனப்பான்மையை ஹாஸ்யமாகச் சொல்லும் பாங்கு, ஆகியன மிகவும் அழகாக இருக்கு.

நவீன காலப் போலீஸ் பயிற்சி முறைகள், போலீஸ் நாய்களின் துப்பறியும் சக்தி எல்லாம் தெளிவாக, எளிய நடையில் சொல்லப் பட்டிருக்கின்றன.

படித்துப் பயன் பெறக்கூடிய புத்தகம். என்றாலும் விலை ரொம்ப அதிகம். மலிவுப் பதிப்பாகவெளியிட்டால் பலரும்படிக்கலாம்.

''காவல் துறையின் கதை'', எழுதியவர்: தமிலன், வெளியீடு: அருணோதயம், இராயப் பேட்டை, சென்னை–14. விலை – ரூ 12.50.

**பேட்டி : 'கிக்கி'**

காப்பிக்குச் சர்க்கரை போடுவதிலிருந்து வீட்டுச் சமையல், நிர்வாகம் ஆகிய அனைத்திலும் பணக்காரத் தாத்தாவையும், டாக்டர் பேரனையும் ஆட்டிப் படைக்கிறாள் ராதா. டாக்டர் ராஜா கேர்ள்பிரண்ட்டோடு கொம்மாளமடித்தால், அதனைத் தாத்தாவிடம் 'வத்தி' வைத்து வேடிக்கை பார்க்கிறாள் ராதா. ராஜாவின் அன்பு முழுதும் தனக்கே உரியதாக வேண்டும் என்று 'மனப்பால்' குடிக்கிறாள்! தாத்தாவின் திடீர் மரணம், தாத்தாவின் உயில், ராஜாவின் கேர்ல் பிரண்ட் குழந்தை மரணம் ஆகியவை ராஜா – ராதா வாழ்க்கையில் 'புயல்' வீசவைக்கும் காரணங்கள்! பிரிந்தவர் கூடுவதும், திரும்பப் பிரிவதும் இந்த நல்லதொரு குடும்பத்தில் அடுத்தடுத்து நிகழும் நிகழ்ச்சிகள்! கடைசியில் அவர்கள் பெற்ற இரு மகன்களான ராமு – லக்ஷ்மணன் திருமணப் பிரச்னை இருவரையுமே சேர்த்து வைக்க உதவுகிறது!

டாக்டர் ராஜாவாக நடிகர் திலகம் ஸ்டெதாஸ்கோப்போடு பவனி வருவது குறைச்சல்! அழகு மன்னனுகக் கூத்தடிப்பது அதிகம்! ராதாவாக நடிக்கும் வாணிஸ்ரீயின் வயிற்றெரிச்சலை வேண்டிய அளவு கொட்டிக் கொள்வதற்கு நடிகர் திலகத்துக்குச் சொல்லியா தர வேண்டும்? பல இடங்களில் டாக்டர் ராஜா உணர்ச்சிகளைக் கொட்டி இதயத்தைத் தொடுகிறார்! அதற்கு ஸ்டெதாஸ்கோப் தேவையில்லை!

நவீன குசேலர் தம்பதியினராக தேங்காய் சீனிவாசன் – மனோரமா ''பழைய'' ஹாஸ்யங்களைச் சிரஞ்சீவித் தன்மையுடன் தைரியமாக வழங்குகிறார்கள்! மனோரமா ஒரு குழந்தை தயாரிக்கும் மெஷினாகவே விளங்குகிறார். 'அந்தோ பரிதாபம்!' என்று அவர் நிலைக்கு இரங்கத்தான் தோன்றுகிறது! சிரிப்பு வரவில்லையே!

'கோமாளி டாக்டராக' நாகேஷ் கௌரவ நடிகர்ப் பட்டியலில் இடம் பெறுகிறார்! டாக்டர் ராஜாவின் பெருமையை உயர்த்துவதற்காக அவர் கோமாளித்தனம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம்! என்ன செய்வது?

'வெள்ளிவிழா' கண்ட சிவாஜி – வாணிஸ்ரீ (ராதா – ராஜா) காதல் களியாட்டங்களுக்கு மத்தியில் இளம் சிட்டுக்களான ராமு – லக்ஷ்மண் அவர்கள் காதலியர் பவனியும் உண்டு.

மேஜர் சுந்தரராஜன் டாக்டர் ராஜாவின் தொழில்பார்ட்னராக, அவரது 'வசவு'களுக்கு ஈடு கொடுப்பவராக இருப்பதோடு சரி! மேஜரின் நடிப்புக்கு இடமில்லையே!

ஒரு டாக்டரின் வாழ்க்கையைப் 'பண்பு' கெடாமல் டைரக்ட் செய்திருக்கிறார் டைரக்டர் விஜயன்! ''பட்டது போதுமா பட்டினத்தாரே!'' என்ற கண்ணதாசன் பாடல் உருக்கமாக ஒலிக்கிறது.

நல்லதொரு குடும்பம் – குடும்பத்தோடு போக நல்லதொரு படம்! **–பி. எஸ். எம்.**

# நல்லதொரு குடும்பம்

பட விமர்சனம்



# ஒரு நக்ஸலைட்டின் வெற்றி!



"சுவர்க்கபூமி" என்ற நாடகத்தில் பல அதிசயங்கள் நிகழ்கின்றன. அழுத்தமான கதையம்சமும் ஆழமான வசனங்களும் உண்டு. அடியோட்டமாக நல்லதொரு கருத்தும் வலியுறுத்தப்படுகிறது என்றாலே இன்றைய தமிழ் நாடக உலகில் அதிசயம் தானே! நாடகத்தில் இடம் பெறும் டாக்டரும் போலீஸ் அதிகாரியும் கடைசி கட்டத்தில் வரும் பரிகாசத்துக்குரியவர்களாக இன்றி மதிப்புக்குரியவர்களாக ஆரம்பத்திலிருந்தே தோன்றுவது வியப்புக்குரியது தானே!

இப்படிப் பல அதிசயங்களை ஒரு நாடகத்தில் நிகழ்த்தி, தமிழ் நாடக உலகம் குறித்து அடியோடு நம்பிக்கை இழந்து விட வேண்டாம் என்று தைரியம் அளித்திருப்பவர் கோமல் சுவாமிநாதன்.

காந்தீயத்தைத்தான் வலியுறுத்துகிறார் கோமல். வன்முறை பயனளிக்காது என்றும் காட்டுகிறார். நாடகக் கதை இப்படி என்றாலும் நாடக பாத்திரங்களிடையே நக்ஸலைட் தான் வெற்றி பெற்று முதலிடத்தைப் பிடித்து விடுகிறார். அவருடைய வசனம்தான் நாடகத்தில் இறுதி வாக்கியமாகவும் அமைகிறது. அது, அடித்தள வர்க்கத்தை அலட்சியம் செய்தால், வறுமையை விரட்ட முயற்சி எடுக்கா விட்டால் என்ன நடக்கும் என்று எச்சரிப்பதாகவும் இருக்கிறது. நக்ஸலைட் ரத்னவேலு பேசும் வசனங்கள் மிகவும் சக்தி வாய்ந்தவை. நக்ஸலைட் தத்துவங்களை வெறுப்பவர்கள் கூடச் சற்று தடுமாறிப் போவார்கள், அந்த வாதங்களைக் கேட்டு. நக்ஸலைட் ரத்னவேலுவாக நடித்த நாயர் ராமனின் ஆவேசத்தைப் பார்த்து ரசிகர்களில் ஒருவர் உணர்ச்சி வசப்பட்டுப் போக அவருக்கு மருத்துவ உதவியே தேவைப்பட்டது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். நாயர் ராமனின் நடிப்பு நாடகத்துக்குத் துணை எனில் வலுவான கதை அமைப்பும் சத்தான வசனமும் சிறந்த டைரக்ஷனும் மற்றவர்களுடைய நடிப்புக்குத் துணை.

நாடக உலகில் புதிய பாதை வகுத்தவர் கோமல் அல்லது பழைய பாதைக்குத் திரும்பியிருக்கிறார் என்று இருவிதமாகவும் கூறலாம்.

முன்பு அந்நியராட்சியிலிருந்து சுதந்திரம் பெற வேண்டியதை வலியுறுத்த சக்தி மிக்க நாடகங்கள் அரங்கேறின. இன்று வறுமையிலிருந்து விடுதலை பெற வேண்டியதன் அவசியத்தையும் இதை அலட்சியப் படுத்துவதால் நேரக் கூடிய அபாயத்தையும் வலியுறுத்தும் நாடகம் ஒன்று மேடையேறியுள்ளது.

— குட்டி கிருஷ்ணன்

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

# தொழிலகங்களின் முக்கிய பணி

தேசத்தின் ஒரு மையத்தில் இதயமெனக் கொலுவிருக்கும் ஆந்திரப் பிரதேசத்தில் இயற்கை வளம் செழித்துக் குலுங்குகிறது. அதன் தலை நகரத்துக்குச் சரித்திரம் பல்வேறு கலாசாரங்களின் ஒருங்கிணைந்த கூட்டு நகரமாகப் பரிணமிக்க வைத்து விட்டது. பழைய உலக அற்புதத்துக்கும் நவீன தொழிலக மையத்துக்கும் ஆந்திரப் பிரதேசம் நம்பிக்கை ஊட்டும் பூமி.

260 நடுத்தர, பிரும்மாண்டமான தொழிலகங்களில் கிட்டத்தட்ட 478 கோடி ரூபாய்களுக்கு முதலீடு செய்யப்பட்டு ஆந்திர ராஜ்யம் தொழில்துறை ராஜ்யமாகப் புகழ் பெற வழியேற்படுத்தி விட்டது. கடந்த ஐந்தாண்டுகளில் நான்கு மடங்கு அதிக அளவு தொழில்துறை நிதிகளைப் பயன்படுத்திப் பெருமை சேர்த்துள்ளது. காக்கினடாவில் பாரத ராஷ்டிரபதி 1978 ஜூலை 7-ந் தேதி அடிக்கல் நாட்டிய 232 கோடி உரத் தொழிற்சாலை 1981ம் வருஷம் அதன் உற்பத்தியைத் தொடங்கும்.

ஆந்திரப் பிரதேஷ் இண்டஸ்டிரியல் டெவலப்மெண்ட் கார்ப்பரேஷன், (APIDC) ஆந்திர பிரதேஷ் ஸ்டேட் ஃபைனான்ஷியல் கார்ப்பரேஷன் (APSFC) ஆந்திரப் பிரதேஷ் இண்டஸ்டிரியல் இன்ப்ராஸ்டிரக்சர் கார்ப்பரேஷன் (APIIC) ஆகிய அபிவிருத்திக் கழகங்கள் ராஜ்யத்தின் பிராந்திய அபிவிருத்திக்குப் பெரிதும் முனைந்து முக்கிய பங்கு வகித்துப் பாடுபட்டு வருகின்றன.

D.G., I & P.R. 47

